# செந்தமிழ்ச் செல்வி

## பொன் விழா ஆண்டு

தமிழ்மொழி, இனம், நாடு
இவற்றின் முன்னேற்றத்தைக்
குறிக்கோளாகக் கொண்டு
நடைபெற்றுவரும்
இத் திங்கள் வெளியீட்டின்
ஐம்பதாவது சிலம்பு

ஐந்தாவது பரல்

சிலம்பு-ரு௦] வள்ளுவர் ஆண்டு உ௦௦௭, மார்கழி (Jan '76) [பரல்-ரு

## 'செந்தமிழ்ச் செல்வி'



---

## உள்ளுறை



---

# செந்தமிழ்ச் செல்வி

திங்கள் வெளியீடு

| சிலம்பு ௫௦ | திருவள்ளுவர் ஆண்டு ௨௦௦௬, மார்கழி சனவரி 1976 | பரல் ௫ |
|---|---|---|


## எங்கும் இசை முழங்கும் மார்கழியில் அடிகளார் இசைப்புலமை அறிவோம்

மறைத்திரு மறைமலையடிகளார் மேனியழகு, குரலழகு, எழுத்தழகு, பேச்சழகு எனப் படித்தோம். குரலழகு என்பது தேனினும் இனிய இசை மலிந்த குரலைக் குறிக்கும். அவர்கள் தேவாரம், திருவாசகம், திருவருட்பாப் பாடல்களைத் தமது தீங்குரலில் பாடுவர். அவர்களுடைய திருமகளாரும் என் அருமை அண்ணியாருமாகிய திருவரங்க நீலாம்பிகையார் குரலும் மிக்க இனிமையாயிருக்கும். அடிகளார் உலாவும்போது இருவரும் சேர்ந்தும் தனித்தனியேயும் பல்வகைப் பண்களில் பாடுவர். தோடி, பைரவி, மோகனம், நீலாம்புரி முதலியன அவர்கள் பாடும் பாக்களில் நயங்காட்டும்.

அவர்கள் ஒலி வழங்கிப் பெட்டி (Gramaphone) யும், தேவாரம், திருவாசகம், திருவருட்பா, திருப்புகழ்ப் பாடல்களைக் கொண்ட இசைத் தட்டுக்களும் வாங்கி வைத்திருந்தனர். ஒய்வு நேரங்களில் இசைத்தட்டுக்களைப் பெட்டியில் வைத்து ஒலி வழங்கச் செய்து அப்பாடல்களைக் கேட்டு மகிழ்வர். கேட்டபடியே அவற்றை அடிகளாரும் மகளாரும் பாடுவர்.

'பித்தா பிறைசூடி', 'மடையில் வாளை', 'பரசு பாணியர்' 'மருந்தவை மந்திரம்', 'இத்தனையாமாற்றை', 'பனைக்கை மும்மத', 'கருவுற்ற நாள்முதலாக', 'அப்பன் நீ அம்மை நீ', 'நாளும் இன்னிசையால்' முதலிய தேவாரப் பாடல்களும், 'கீதமினிய குயிலே', 'மெய்தான் அரும்பி', 'நாடகத்தால்', 'நானேன் னுன்னமார்', 'தோலுந் துகிலும்' முதலிய திருவாசகத் தீம்பாடல்

களும், 'கல்லார்க்கும் கற்றவர்க்குப்', 'அருட்சோதித் தெய்வ மெனை', 'வானமுயடி வாழையென', 'நான்படும் பாடு', 'வான் கலந்த மாணிக்கவாசக', 'ஒருமையுடனினது' முதலிய திருவருட் பாப் பாடல்களும் பொறிக்கப்பெற்ற இசைத்தட்டுக்கள் அடிக ளிடமிருந்தன அப்பாடல்களைப் பாடியவர்கள் 'கோயமுத்தூர் தாய்', பெங்களூர் தாய்,' 'பவானி மகாலிங்கையர்', 'சுந்தர மூர்த்தி ஓதுவார', 'சண்முக வடிவு' முதலியோராவர்.

10—2—1947 நாட்குறிப்பில் 'இன்று ரூபா இரண்டு கொடுத்து ஊசிகள்வாங்கி ஒலிவழங்கிப் பெட்டியில் இசைத் தட்டுக்களை வைத்து இயக்கிப் பாட்டுக்களைக் கேட்டு இன்புற் றேன்' என்றும், 12—8 48இல் 'இன்று பிற்பகல் 4மணி முதல் 6 30 மணிவரை இசைத்தட்டுப் பாட்டுக்களைக் கேட்டுப் பெரு மகிழ்வுற்றேன்' என்றும் அடிகளார் எழுதியுள்ளார்கள்.

அடிகளார் சொற்பொழிவு ஆற்றும்போது தொடக்கத்தில் 'உலகெ லாமுணர்ந் தோதற் கரியவன்' என்ற தெய்வச் சேக்கிழார் அருட்பாடலை இசையோடு பாடிக் கேட்க வந்திருப் போர் உளத்தை ஈர்த்து ஒருநிலைப் படுத்துவர். இடை யிடையே மேற்கோளாக எடுத்தாளும் தேவார திருவாசகப் பாடல்களை இசையோடு பாடி மகிழ்விப்பர். சொற்பொழிவுக் கிடையில் பாலருந்தி ஒய்வு கொள்ளும் நேரங்களில் தேவார இசைமணி சுந்தரமூர்த்தி ஓதுவாரவர்களைப் போன்ற தேவார ஓதுவார்களைக் கொண்டு தேவார திருவாசகப் பாடல்களைப் பாடச் சொல்லுவர். சுந்தரமூர்த்தி ஓதுவாரவர்கள் மட்டும் அடிகளார் ஆற்றத் தொடங்கும் சொற்பொழிவுக் கேற்ற கருத் தமைந்த பாடலைப் பாடி அடிகளார்க்கும் அவையோர்க்கும் பெருங்களிப்பூட்டுவர்.

என் அருமைத் தமையனார் திருவரங்கனார், அடிகளார் திருமகளார் நீலாம்பிகையார் இவர்கள் திருமணம் 2-9—1927 காலையில் மயிலாப்பூர் திருக்கோயிலில் பெருந்திரளான அறிஞர் பெருமக்கள் முன்னிலையில் மிகவுஞ் சிறப்பாக நடைபெற்றது. வரவேற்பும் மணவிருந்தும் சென்னை இலிங்கிச்செட்டித் தெரு 306 ஆம் எண் கழகக் கிளை நிலையத்தில் நடைபெற்றன. அன்று மாலையில் தேவார இசைமணி சுந்தரமூர்த்தி ஓதுவார் அவர்கள் தேவார இன்னிசைக்கச்சேரி நிகழ்த்தது. இராயபுரம் நார்த்விக் மகளிர் உயர்பள்ளியில் இசையாசிரியராக இருந்து பின்பு இசைப் பேரறிஞராகி இசையுலகிற் புகழ்பெற்ற சாம்பமூர்த்தி அவர்கள் சிற்றியாழ்(பிடில்) வாசித்தனர்.

8—9—1927 இல் அடிகளார் தம் பல்லாவரம் மாளிகையில் நடைபெற்ற மருவிருந்தில் சுந்தரமூர்த்தி ஓதுவாரவர்கள் 'வள்ளி திருமணம்' பற்றிப் பக்க இசைக் கருவிகளோடு இசைக் கதைச் சொற்பொழிவாற்றினர்.

என் அருமை அண்ணியாரவர்கள் தாம் பெற்ற குழந்தைகளைத் தொட்டிலில் இட்டு ஆட்டும்போதெல்லாம் தேவார திருவாசகச் செழும் பாடல்களை இன்னிசையோடு பாடிக் கொண்டேதான் தூங்க வைப்பர். அப்போதெல்லாம் அவர் தமது மடியில் புத்தகத்தை வைத்துக் கண்ணால் பார்ப்பதும் வாய் பாடுவதும் ஒரு கை தொட்டிலை ஆட்டுவதுமாக இருக்கும்.'

சென்னையில் டாக்டர் தருமாம்பாள், பண்டிதை நாராயணியம்மாள் ஆகியவர்களோடு நெருக்கமாய்ப் பழகியவரான 'தேவரம்மா' என அழைக்கப்பெறும். 77 அகவை நிறைந்த கிழப்பெண் ஒருவர் தமது மாளிகைக்கு வந்திருந்து தேவாரப் பாடல்களைப் பாடி மகிழ்வித்தனர் என்று அடிகள் 24—2—1949 நாட்குறிப்பில் எழுதியுள்ளனர்.

கோவை கவியரசு பண்டித கு. நடேசகவுண்டர் தம் அருமைப் பெண்மக்கள் இருவரையும் தமது மாளிகைக்கு அழைத்துவந்து தேவாரம் திருவாசகம் திருப்புகழ்ப் பாடல்களை இன்னிசையோடு பாடச் செய்தனர் என்றும், இருவரும் நன்கு பாடினர் என்றும், இருவரில் மூத்த மகள் மிக்க திறமையுடையவள் என்றும் அடிகள் 19—2—1949 நாட்குறிப்பில் எழுதியுள்ளனர்.

அடிகளார் 'திருஞானசம்பந்தர் வரலாற்றுண்மை' என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றும்படி ஏற்படும்போதெல்லாம் தொடக்கத்தில் வள்ளல் இராமலிங்க அடிகளார் பாடிய அடியிற்கண்ட பாட்டை உளமுருகி இன்னிசையோடு பாடுவர். அவையோர் சொற்பொழிவு முடியும்வரை தமது மனம் புறம் போகவொட்டாமல் அமைந்திருந்து கேட்டு மகிழ்வர்.

*சீரார் சண்பைக் கவுணியர்தம் தெய்வ மரபில் திகழ் விளக்கே*
*தெவிட்டா துளத்தில் தித்திக்குந் தேனே அழியாச் செல்வமே*
*காரார் மிடற்றுப் பவளமலைக் கண்ணின் முளைத்த கற்பகமே*
*கரும்பே கனியே என்னிரண்டு கண்ணே கண்ணிற் கருமணியே*
*ஏரார் பருவம் மூன்றிலுமை இனிய முலைப்பால் எடுத்தூட்டும்*
*இன்பக் குதலைமொழிக் குருந்தே என்னுயிர்க் கொருதுணையே*
*பேரார் ஞான சம்பந்தப் பெருமானேநின் திருப்புகழைப்*
*பேச வின்றேர் மேன்மேலும் பெருஞ்செல்வத்திற் பிறங்குவரே.*

வ. சு.



# மறைத்திரு மறைமலையடிகளார் வரலாற்று மாட்சி

*மாணவர், திருக்குறள்பீடம் குருகுலம்*

அழகரடிகள் (இளவழகனார்)

## 5. உயர்ந்த நோக்கம்

ஆசிரியர் மறைமலையடிகள் ஏறக்குறைய ஒரு நூற்றாண்டுக்குமுன் 1876ஆம் ஆண்டு இத் தமிழகத்தில் தோன்றினார்கள். 1976ஆம் ஆண்டில 'சைவ சித்தாந்தக் கழகம்' அடிகளாரின் நூற்றாண்டு விழாவைக் கொண்டாட இருக்கிறது. தமிழ் விழாக்களில் இது மிகச் சிறந்த விழா! தனித் தமிழ்க்கு உழைக்கும் 'செந்தமிழ்ச் செல்வி'யின் 50ஆம் ஆண்டாகிய பொன் விழாவும் அப்போது நிறைவுறுகின்றது; இரண்டும் ஒன்றாய் வருகின்றன; திருவருட் செயல்!

பிறந்தபோதே அடிகளார் பிறவி எடுத்த நோக்கத்துக்கேற்றபடி தமிழும் சிவமும் பயிலலானார். அவற்றின் உயர்ந்த நோக்கங்களில் பிறர் நலத்தை முன்வைத்துத் தந்நலத்தை அதற்கடுத்த நிலையில் கவனித்துக்கொள்ளுதல் முதன்மையானது! இக் கருத்தை ஆசிரியரடிகளே,

> “பொதுநலம் கருதாது அவ்வப்போதும் வரும் தந்நலங் கருதுபவர்களாய் உயர்ந்த நோக்கம் இன்றி”

என்று புலப்படுத்துவார்;

> “அறிவும் ஒழுக்கமும் பொதுநல முயற்சியும் உடையாரே உயர்ந்தோர்”

என்று மேலுங் கூறுவர்.

(—*மக்கள் நூறாண்டு உயிர் வாழ்க்கை, பக். 145, 147.*)

“தமக்கென முயலா நோன்தாள், பிறர்க்கென முயலுநர் உண்மையானே......உண்டாலம்ம இவ்வுலகம்” என்பது புறநானூறு! இதற்குக் காரணமும் இருக்கிறது.

எதுவும் பிறர்க்கென முயலும்போதுதான் தமது நிலை தானே மேம்படுகிறது! கடவுளுக்குப் பெரிய பெரிய வெண் குடைகள் விழாவிற் பிடிப்பதுண்டு; குடை பிடிப்பவர்க்கு நோக்கம் தமக்கென்பதன்று; ஆனால், குடையில் ஒன்றாகவும் நடுவாகவும் நிற்பவர் குடைபிடிப்பவரே! யாருக்காகக் குடை

பிடிக்க ஏற்பாடோ அவர் அக் குடையின் ஒரு பகுதியிலேதான் இருக்கவேண்டும்; இஃது, இயற்கை! பிறர்க்கென முயன்றால் தந்நலம் தாமே அமைகின்றதென்பது, இதனால் விளங்கும்; "ஊரார் பிள்ளையை ஊட்டி வளர்த்தால் தன் பிள்ளை தானே வளரும்" என்பது அறிந்தோர் பழமொழி!

பிறப்பின் இயற்கையை உற்றுநோக்குவார்க்கும் இவ் வுண்மை எளிதில் தெளிவாகும்; குழந்தைப் பருவமே பெற்றோ ராகிய பிறரால், உடன் பிறந்தவரால், ஆசிரியரால், அரசி னரால், சான்றோரால் வளர்க்கப்படுகின்றது; கட்டிளம் பருவமாய் வளர்ந்தபின், தம் குழந்தைகளை வளர்க்க அவர் முற்படுகின்றார்; மூப்பு எய்தினால், முற்றிலும் குடும்பத்தார்க்கே விட்டுவிடுகின்றார்.

இனி உலகியற்கையை உற்று நோக்கலாம்; 'அண்டம்' என்னும் இவ்வுலகம் 'பிண்டத்'திலுள்ள உயிர்களுக்கு உதவியா யிருக்கிறது; உலகம் இல்லையானால் உலகிற் பிறக்கவேண்டிய வேலையுமில்லை; உலகம் உதவியாயிருக்கும் என்னுங் கருத்தி லேதான் உயிர்கள் உலகத்திற் பிறப்பிக்கப்படுகின்றன.

உலகியற்கையைப் 'புறம்' என்று தமிழ் நூல்கள் வகுத்துக் கூறுகின்றன; 'புறம்' என்னும் பொதுநலம், 'அகம்' என்னுந் தந்நலத்துக்கு உதவி; 'புறம்' இல்லையானால் 'அகம்' மாட் சிமைப்படாது; பிறந்தவரைத் தவிரப், 'புறம்' என்னும் உலகத்தில் இன்னும் எத்தனையோ மக்களும் உயிரினங்களும் உயிரில்லாத பொருள்களும் உள்ளன; பிறந்தவர்க்கு அவை யெல்லாம் பல வகையிலும் மாட்சிமை செய்யும் இயைபு கொண் டிருக்கின்றன. உலகத்தின் அழகுகளை நுகரவே வெளிப் புலன்கள் உள்ளன; புலனறிவு மாட்சிகளை ஏடும் எழுத் தாணியுங் கொண்டு நூல்களாக வடித்துக் கூறும் பேரறிவு மிக்கவர்களாய்ப் புலவர்களும் உதவுகின்றனர்!

மெய்ந் நூல்களாகிய திருமுறைகள்கூட உலகியற்கையை நன்கு புனைந்து, அகத்தின் அகநலமாகிய இறைவனோடுகூட்டி அருளிச் செய்வதை அங்கங்குங் காணலாம்,

"வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென் றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி
முகில்பார்க்குந் திருவை யாறே"

என்பது ஒரு பாடலின் பிற்பகுதி!

"கோழைமிட றாககவி கோளுமில
வாகஇசை கூடும்வகையால்

ஏழையடி யாரவர்கள் யாவைசொன
சொல்மகிழும் ஈசனிடமாம்
தாழையிள நீர்முதிய காய்கமுகின்
விழநிரை தாறு சிதறி
வாழையுதிர் வீழ்கனிகள் ஊறிவயல்
சேறுசெயும் வைகாவிலே''

என்பது ஒரு பாடல்; இப்பாடலில் ஏறக்குறைய முழுப் பகுதியும் மக்களியற்கை உலகியற்கைகளைப் புனைந்துரைக்கின்றது!

அருள் நுவலும் மெய்ந்நூல்களிற்கூட இவ்வாறு வருமானால், ஏனை உலகியல் நூல்கள் உலகியற்கையை எவ்வளவு விரித்துக்கூறும்! புறவியல் அகவியலுக்கு உதவியாயில்லையென்றால், அருட்பாடல்களில் உலகியற்கைகள் ஏன் விரித்துரைக்கப்படும்! இவ்வாற்றால், புறவியற்கைகள் அவ்வளவும் அகமாகிய தந்நலச் சிறப்புக்கு இயல்பாகவே ஏதுவாதல் இனிதுணரப்படும்.

சங்க நூல்கள் உலகியற்கைகளை விரித்துரைப்பதில் மிக்க கருத்துள்ளவை; அதனால் அகநலத்துக்கு வாய்ப்புக் கோலுபவை; பத்துப் பாட்டில் பட்டினப்பாலை என்று ஒருநூல் உண்டு; அதில் புறப்பொருள் விரிவும் விளக்கமும் பெருக வரும்; அவை அத்துணையும் சுருங்க உரைக்கப்படும் அகப்பொருள் உண்மைக்கு உதவி; காரணம், புறச் சேவைகளால் அகநலம் எங்கும் மாட்சிமைப்படுதலே!

உலகியற்கை மக்களியற்கைகளெல்லாம் இங்ஙனம் சேவைக்குரியனவாயிருத்தலால், பிறர்க்கென முயன்று சேவை செய்வார்க்கு அகமாகிய தந்நலம் அதன் விளைவாய் அமைந்துவிடுகிறது; அகத்தில் செம்மைநலம் சிறந்தோங்குகிறது!

பிறர்க்கென முயலுதலே 'முயற்சி' எனப்படும்; தந்நலப் பற்றுவிட்டால் மட்டுமே இந் நன்முயற்சிகள் சிறக்கும்; பற்றுவிடுவோரை, அதனால், 'முயல்வார்' என்பார் திருவள்ளுவர்; இல்வாழ்வார், பற்றுவிடும் முயற்சியில் முன்னிற்போராதலின், அவரை ''முயல்வாருள் எல்லாந் தலை'' என்றது அவர் தமிழ்மறை! மேலெடுத்துக் காட்டிய புறநானூற்றுப் பாடல் ''தமக்கென முயலா நோன்தாள்'' எனத், தக்கோர் செயலை முயற்சியின்மேல் வைத்துரைத்ததுங் காண்க. தமக்கென முயலாததுதான், பிறர்க்கென முயல்வதுதான் 'வலிமைவாய்ந்த முயற்சி' யெனவும் அப்பாடல் குறித்தது; நோன்தாள் என்பது வலிமையான முயற்சி! ''உறுநர்த் தாங்கிய மதனுடை நோன்தாள்''

என்னும் திருமுருகாற்றுப்படை அடியானும் இவ்வுண்மை வலியுறுத்தப்படுதல் காண்க! 'நோன்தாள்' என்பது, உறு நரைத் தாங்குதலாக இருப்பதுதான் இயல்பு!

இனி, வாழ்க்கையை எடுத்துக்கொண்டாலும், இவ் வுண்மை இனிது தெருட்டப்படும்; ஔவையார் 'ஆத்திசூடி'யில் கூறும் அறிவுரைகளெல்லாம் பெரும்பாலும் பிறர்க்கென முயலுத லாகவே காணப்படும். இல்வாழ்வோர்க்குக் கடமைகள் கூறிய திருவள்ளுவர்,

"இருந்தோம்பி இல்வாழ்வ தெல்லாம் விருந்தோம்பி
வேளாண்மை செய்தற் பொருட்டு"

"விருந்து புறத்ததாத் தானுண்டல் சாவா
மருந்தெனினும் வேண்டற்பாற் றன்று"

எனவும்,

"தாளாற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு
வேளாண்மை செய்தற் பொருட்டு"

"ஊருணி நீர்நிறைந் தற்றே உலகவாம்
பேரறி வாளன் திரு"

எனவும் தெரிவிப்பார்; இவற்றில் தமக்கென முயறல் யாதிருக் கின்றது!

'இல்வாழ்வார் தந்நல மறுத்தவரல்லர்' என்று சிலர் கருதக் கூடும்; தந்நல மறுத்தற் பொருட்டே இல்வாழ்க்கை யறம் திருவள்ளுவரால் முதன்மையாய் ஓதப்பட்டது!

"அறத்தாற்றின் இல்வாழ்க்கை யாற்றின் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்?"

"ஆற்றின் ஒழுக்கி அறனிழுக்கா இல்வாழ்க்கை
நோற்பாரின் நோன்மை உடைத்து"

என அவர் திருவாய்மலர்ந்தமை இங்கே எண்ணிப் பார்த்தற் குரியது! இல்வாழ்க்கையை அறத்தாறு என்பதனாலும் நோன்பு வாழ்க்கையைப் 'புறத்தாறு' என்பதனாலும் திருவள்ளுவர் விதந்தோதி வேற்றுமை தேற்றுதலும் நினைவு கூர்க.

"தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தான்என்றாங்கு
ஐம்புலத்தாறு ஓம்பல் தலை"

என்னும் மறைமொழியில், 'தான்' என்பதைக் கடைசியாக வைத்து, உதவத் தக்காரையெல்லாம் முதலில் வைத்து, மக்கள் எப்படி நடந்து கொள்ளவேண்டும் என்பதை இனிது விளக் கினார்.

இவ்வாற்றாலெல்லாம் நமக்குத் தெரிவது என்ன? தம்மைப் பற்றிய தந்நலங்கள் தாமே நடைபெறும்படி பற்றுவிட்டு, ஒழுக

வேண்டும்; முயற்சிகள் வலிய முயற்சிகளாய் நிகழவேண்டுமானால், அம் முயற்சிகள் தமக்கென முயலாதனவாய்ப் பிறர்க்கென முயல்வனவாய்ப் பொதுநல முயற்சிகளாய் இருக்க வேண்டும்.

ஆசிரியர் மறைமலையடிகள், இவ் வியல்பினை இளமையிலேயே இனிது தெளிந்து, எதனையும் பிறர்நலங் கருதியே முயலும் உயர்நோக்கம் உடையவரானார்.

> ''தம்மைப் போலவே தமது நாட்டிற் பிறந்தவர்களெல்லாரும், செல்வ வாழ்க்கையிற் சிறந்து வாழ வேண்டும் என்னும் உயர்ந்த நோக்கம்''

என்று, உயர்ந்த நோக்கம் இன்னதென்பதை விளக்குதலும்,

> ''கடவுளின் அருளைப் பெறுதற்கும், வாழ்க்கையின் நலங்களை அடைதற்கும் எல்லா மக்களும் ஒத்தஉரிமை உடையர்''
>
> —அறிவுரைக் கோவை, பக். 186, 198

என்று பொதுநலம் விளக்குதலும் அடிகள் இயல்பாயின! அத்தகைய பொதுநலம் என்பன யாவை என்பதும் அடிகள் அப் பொது நிலையை எவ்வெவ்வாறெல்லாம் வாழ்க்கை நெடுக முயன்று உயர்நோக்கில் திகழ்ந்தார்கள் என்பதும் அறிந்து தெளிதல் நன்று.

மக்கள் மேம்பட வேண்டுமானால், அவர்கள் 'தொழில் நலம்' 'கலை நலம்' 'மொழி நலம்' 'அருள் நலம்' 'சேவை நலம்' உடையவர்களாய்ச் சிறக்க வேண்டும். ஒவ்வொருவரும் ஒரு தொழில், ஒரு கலை, ஒரு மொழி, ஒரு சமயம், ஒரு தொண்டு தெரிந்தவர்களாய் வாழ்வாரானால், அவர்கள் வாழ்க்கையிலும் அனைவர் வாழ்க்கையிலும் நிறைவு இருக்கும். இவற்றில் எந்தத் தொழிலாவது ஒரு தொழில், எந்தக் கலையாவது ஒரு கலை, தெரிந்திருக்கலாமாயினும், உழவு தொழிலும் அதனோடு தொடர்புற்ற வாழ்க்கைக் கலையும் அறிந்திருப்பது முதன்மை; மொழி என்பதில் தாய்மொழிப் புலமை முக்கியம்; அருள் என்னும் சமயத்தில், அவரவர் தாய்ச் சமயமே சிறந்தது; சேவையில், புலை கொலை நீக்குந் தூய்மைச் சேவையே மேலானது! உலக மாந்தரனைவர்க்கும் இவற்றின் கருத்துக்களை நளினமாக விளக்கித் தெளிவை உண்டாக்கி வாழ்க்கையில் உயர்த்த வேண்டும்.

பொதுநலச் சேவைகளை அருள் அடிப்படையிற் கலை முறையிலாவது அரசியல் முறையிலாவது செய்ய முடியும்; அரசியல் மாறுதலுடையது; கலையியல் அரசியலைப்

பார்க்கிலும் நிலையுடையது, உயர்ந்தது; நுட்பமிக்கது! சான்றோர், கலை முறையில் தொண்டாற்றுவர்; அடிகளார் முயற்சி இத்தகைய கலை மாண்பமைந்தது; கலையியலும் அரசியலும் அருள் அடிப்படையில் நிகழ்வனவே யாயினும் கலை என்பது நுட்பச் சிறப்புடையதாகலின், அரசியலை விடக் கலையியல், அருளுக்கு அணுக்கமானது! கலை முறையிற் சேவை செய்வோர்க்கு அருளடிப்படை இனிதமையும்; எளிதில் நிறையும்; ஆதலின், அடிகளார் அருள் உதவியோடு கலை முறையில் பிறர்க்கென முயன்று வந்தார்.

மொழிநலம்:

மக்கள் பிறந்தவுடன் பயில்வது மொழி! அதனால், 'அன்னை மொழி' என்று அது பாராட்டப்படும்; ''பிறந்து மொழிபயின்று'' என்றார் காரைக்காலம்மையார்; அதன் பின்னர்த்தான், இறைவனிடம் காதல் சிறப்பது என்று அவர் தெரிவித்தார்.

தமிழ்மொழி தமிழரின் அன்னை மொழி! இறக்கும் வரையிலும் பின்னுங்கூட மக்கட்கு அம் மொழி, பிரியாத் துணையாயிருக்கிறது; அயல் நாடுகளுக்குச் செல்லும்போது, எல்லாப் பொருள்களையும் நீங்கினாலும், அப்படி நீங்காமலும் பிரியாமலும் தொடர்வது தாய்மொழி! மொழி நலத்தின் இவ் வருமையுணர்ந்து, அதனை நன்றாகப் பயின்றுகொள்ள வேண்டுவது மக்கள் கடமை!

தமிழ்மொழியைத் தமிழர் அனைவரும் பயிலும்படியும், ஆழ்ந்து பயிலும்படியும், அழகாகப் பயிலும்படியும், பிறமொழிகளோடு ஒப்பிட்டுப் பயிலும்படியும், உணர்ச்சி மிக்க செய்யுளிலும் விளக்கமிக்க உரைநடையிலும் தோய்ந்து பயிலும்படியும், உயிர்க்கு உரந்தருகின்ற கலைகளையும் நாடுகளின் வரலாறுகளையும் மெய்ந் நூல்களையும் தாய்மொழித் தமிழிலேயே பயிலும்படியும், தமிழைத் தமிழாக வைத்துப் பயிலும்படியும், அதன் பொருள் நலத்தை இருவகை வழக்கிலும் கரவின்றி வைத்துப் பயிலும்படியும் தமிழ் மக்கள் அனைவரும் இப் பயிற்சியில் மேம்பட்டுக் கல்வி வல்லவராய் இயற்கை நுகர்வுகளில் திளைத்துப் பிறவி அறுக்குமாறு பயிலும்படியும் மறைமலையடிகள் தனியிருந்து பிறர்க்கென முயன்று வந்தார்கள்; இடர்களைப் பொருள் செய்யாமலும், எவர்க்கும் அஞ்சாமலும் இப் பணிகள் நடந்து வந்தன.

அடிகளார் தனித்தமிழ் இயக்கங் கண்டவர்கள்; இது, தமக்காக அன்று, தமிழ்மொழியும் தமிழகமும் சிறக்கும் பொருட்டேயாம்.

பண்டைப் பேராசிரியர்களின் சொல்லாக்க முயற்சிகள் ஆழமும் அழகும் மிக்கவையாதலால், அவற்றை மக்கள் இழந்து விடக்கூடாது என்னும் நன்னோக்கமும் அவர்களுக்கு இருந்தது!

தனித் தமிழியக்கம் யார்க்கும் தீங்கு தருவதன்று; அதே நேரத்தில் அது தமிழர்க்கு ஆக்கமாகவும் இருப்பது; எல்லா மொழிகளும் விழிப்புற்றுத் தத்தம் இயல்புகளில் இயங்குவதற்குத் துணை புரிவதுமாகும்; இவ் வியக்கத்தால் உண்மைத் திறம் பெருகிக் கரவு உள்ளம் மறையவும் வாய்ப்பு நேர்ந்தது!

இயக்க நோக்கம்; தந்நலங் கருதுவதாயிருந்தால், அந் நலத்துக்குத் தனித் தமிழியக்கம் காணாமலிருப்பதே நல்லது. செல்வம் முதலிய நலங்களும் கூடிவரும்; பெயரும் போலிப் புகழிற் பொலியும்; அத் தந்நலத்தை மறுத்தவர் அடிகளார்; நாட்டுக்கு நலம் செய்தலே அவர் நோக்கமாயிருந்தது!

புதிய புதிய சொல்லாக்கங்கள் இவ் வியக்கத்தால் மேன் மேலும் உண்டானதும் இதன் நலங்களுள் ஒன்று; கலைச்சொல் ஆக்கங்கள், விஞ்ஞானச் சொல்லாக்கங்கள் முதலியன ஏராள மாய்ப் பெருகின. அரசு வழியிலும் அறிஞர் வழியிலும் பெருக் கெடுத்தன.

ஊன்றி நோக்கினால் மொழியின் சிறப்பு அதன் சொல் வளத்தில் அமைந்துள்ளமை காணலாம். வேர்ச் சொற்கள் பலவற்றைத் தமிழ்மொழி ஏராளமாய்ப் பெற்றிருத்தலின், அவற்றின் துணை கொண்டு எல்லாத் துறைகளுக்கும் புதுச் சொற்களை உண்டுபண்ணும் வாய்ப்புக்குக் குறைவேயில்லை. பகுதி விகுதி முதலிய சொற் பாகுபாடுகளாகிய சொல் லிலக்கணச் சிறப்பும் தமிழ்க்கு மிகுதி! சாரியைகளும் சந்திகளும் வேறு துணை செய்கின்றன; மிக எளிதாகப் புதுச் சொற்களை உருவாக்கலாம்.

பழம்பெருஞ் சொற்களை அழிந்து போகாமல் காப்பாற்று வதற்கு, அவற்றை இருவகை வழக்கிலும் பொருள் உணர வைப்பது இயக்கமுடையோர் கடமை; பொருள் தெரிந்த சொற்களை முன்பின் இட்டுத் தொடர்களை வழங்கி வந்தால், இடையில் அமைந்த அரிய சொற்களுக்கும் தானே பொருள் விளங்கி விடும்; அடிகள் இயற்றியருளிய நூல்களிலெல்லாம் அத்திறம் மிக நன்றாகக் காணப்படும். இந்த அழகியலைத் தனித் தமிழியக்கம் எல்லார்க்கும் வழிகாட்டி உய்வித்திருக்கிறது;

'மக்கள் நூறுண்டு உயிர் வாழ்க்கை' என்னும் ஒரு நூலில் மட்டும் அடிகள் உண்டாக்கிய புதுப்பாக்கங்களும், பழஞ்சொல் வழக்கங்களும் ஏராளம்! சில குறிக்கலாம்:

'உள்ளொளி' 'உயிர்க்காற்று', 'ஈளை இருமல்' 'வடிபால்' 'மூச்சுப் பழக்கம்' 'ஞாயிற்று மண்டிலம்' 'பகற்கலை' 'மதிக்கலை' 'மின்னொளி' (விந்து), 'மின்பிழிவு' (நாதம்), 'வியர்வைப் புழைகள்' 'நீரேற்றி' 'காய்ச்சல்' என்னும் 'உயிர்த்தீ' 'கன்னங் கறேல்' 'சாய்வெயில்' 'காட்டுத் தீ' 'வெள்ளை வெளேல்' 'கிச்சிலி' (நிறம்), 'மீனுக்கெண்ணெய்' 'நிறத்துருக் கடவுள்' 'நிறைபிழிவு' 'கோழைக் கட்டு' 'பரியமுறைகள்' 'பெருமறை' 'உதவி முயற்சி' 'வெள்ளிய மாசி' 'நீர்த்தூம்பு' 'அரத்துவாரம்' 'கக்கற் கழிச்சல்' 'செம்மை நூல்' 'இலந்தன்' 'நீர் உறிஞ்சு பொறி' 'மூச்சு நீர் 'தீவிய நீர்' 'உயிர்த்துகள்' (Calc Proto Plasm) 'நீர்வீக்கம்' 'மெருகெண்ணெய்' (Varnish), 'பன்னீர்ச் சவர்க் காரம்' 'தேம்பொருள்' 'கொப்பூழ்' 'கட்டுக் கிடையாக' 'பொறு பொறுப்பான' 'நீறுதீற்றி' 'தீக்கல்' 'சாம்பருப்பு' 'குப்பிகள்' 'எண்ணெய்க்கடு' 'உலவாக்கிழி' 'முதலுணா' (Protein), 'கொழுப்புணா' (Fats), 'இனிப்புணா' (Carbohydrates), 'உப்புணா' (Salts). 'நீருணா' (Water), 'ஒலிவநெய்' 'உவர்க்காரம்' 'உய்வளவு' அல்லது 'உய்வுறை' (Vitamins), 'பொருத்து' 'கடுக் கொட்டை' (Walnut), 'கல்யாணை' முதலிய எத்துணையோ பல. அடிகள் யாத்த அனைத்து நூல்களிலும் இத்தனித் தமிழ்ச் சிறப்பு நன்கு காணப்படும்; அடிகளார் இவ்வகையில் சோம்புவ தில்லை; பாராமுகம் கொள்வதில்லை; கடமை என்று மகிழ்வோடும் கிளர்ச்சியோடும் தமிழ்ப்பணி புரிந்து வந்தார்; அடிகளார் தனித் தமிழ் எழுத்து இதனாலும் வெற்றிமிக்கதாயிற்று!

அடிகளார் வாய்மொழிகள் சில இங்கே நினைவு கூர்தல் நல்லது:

"தென்றமிழ் நாட்டிலுள்ள நம்மனோர்க்கு உயிர்போற் சிறந்தது தமிழ்மொழி !...பல்லாயிர ஆண்டுகளாக உயிரோடு உலவிவரும் சிறப்புடையது; இறவாதது; கட்டுக் கதைகளைப் போல்வன சிறிதும் இல்லாதது; உண்மை நூல்களே நிரம்பி யுள்ளது; முறையில்லாத விதிகளை வகுத்த...முறையற்ற நூல்கள் சிறிதும் இல்லாதது; எத்தகைய நுண்ணிய உயர்ந்த ஆழ்ந்த கருத்துக்களையும் தெரிவித்தற்கியைந்த சொல்வளம் உடையது; பிறமொழிச் சொற்களை இதன்கட் புகுத்தாமல் இதனையும் இதன் நூல்களையும் எல்லார்க்கும் தனிமையிற் கற்பித்தல் இன்றியமையாததாகும்"

—அறிவுரைக் கோவை, பக். 198, 9.

: "மற்றை மொழியின் உதவியை வேண்டாது தனித்து இயங்கவல்ல சொல்வளமும் பொருட்செழுமையும் உடைய நம் செந்தமிழ் மொழியை அதற்கே உரிய சொற்களால் வழங்காமல்

அயல்மொழிச் சொற்களை இடையிடையே நுழைத்து அதன் அழகையும் வலிமையையும் சிதைத்தல் பெரியதொரு குற்றமா மென உணரலானேம்; இன்றியமையாது வேண்டப்பட்டா லன்றித் தமிழிற் பிற சொற்களைப் புகுத்தல் நிரம்பவும் பிழைபா டுடைத்து''

—பட்டினப்பாலை ஆராய்ச்சியுரை,
2ஆம் பதிப்பின் முகவுரை, பக். 18.

''எல்லாரும் தமிழாகிய தமது பண்டைமொழியையே வழங்கிப் பிளவுபடாதிருந்தால், குமரி முதல் இமயம் வரையில் இன்றைக்கும் தமிழும் தமழருமே பிறங்கி நிற்கும் பெரும்பேறு உளதாமன்றே!

''ஒரு மக்கட் கூட்டத்தவராய் ஒற்றுமையும் வலிவுங் கொண்டு வாழ்ந்தவர், பலவேறு மக்கட் பகுப்பினராய்ப் பிளவு பட்டு ஒற்றுமையும் வலிமையும் இழந்து, வறுமைப்பட்டுத் தாழ்வது அவர் தமது பண்டை மொழியின் சொற்களைப் பலவாறு திரித்துப் பேசி அயன்மொழிச் சொற்களையும் எடுத்துச் சேர்த்து வழங்குதலினாலேயாம்.''

—முற்கால பிற்காலத் தமிழ்ப் புலவோர் (பக். 23, 9)

தமிழ் நடையைத் தனித்தமிழ் நடையாக்குவதில் எல்லாத் துறைகளிலும் அடிகளார் பெருவெற்றி பெற்றிருக்கிறார். தமிழ் மக்களிடையே தனித்தமிழ் உணர்ச்சியைப் பெருக்கித் தமிழ் மொழியைத் தமிழாகவே வழங்குமாறு இங்ஙனம் பொதுநலம் பேணி முயன்றார் அடிகளார்! தமிழ்ச் சுவையைத் தமிழ்மக்களுக்கு அடிகளார் விளக்கிக் காட்டிய அளவு பிறர் யாரும் செய்யவில்லை. இவ்வுயர்ந்த நோக்கத்தால் தமிழ்நாடு பெற்றபேறு பெரிது!

தாயுமான அடிகள்,

''உண்டவர்க் கன்றி உட்பசி ஓயுமோ
கண்டவர்க் கன்றிக் காதல் அடங்குமோ
தொண்டருக்கெளி யானென்று தோன்றுவான்
வண்டமிழ்க்கிசை வாக மதிக்கவே'' —பொன்னை மாதரை, 70.

என்பதில், தொண்டையும் தமிழையும் இணக்கிப் போற்றினமை காண்க. தமிழ்க் கொள்கையே பிறர்க்கென முயலும் பொது நலத் தொண்டு!

'தொண்டு' என்னுஞ் சொல்லாக்கமே, அது, பழைமை வாய்ந்ததென்பதையும் நினைவூட்டும்; அது, பற்றற்றுச் செய்யும் பொதுநலச் சேவை. தமிழகத்துக்கு இந்நோக்கம் புதுவதன்று; திருவள்ளுவரை உலகினுக்கே தந்தது இத் தமிழ்நாடு. உலக நாடுகள் அனைத்தையும் நோக்கியது அவர் பொதுமறை!

அடிகள் நோக்கம் உயர்வுற்றதன் காரணமே, உண்மை வழியில் அவர் கருத்துக்கள் சென்றமை; உண்மை என்பது நாட்டின் வரலாற்றையும் உட்கொள்வது; ஆதலால் அடிகளார் நினைவுகள் வரலாறுகளைப் பின்னிக் கொண்டன; தமிழில் வைத்த உள்ளம் அதன் வரலாறுகளை நினைந்தது; தமிழிலே தமிழரும் தமிழகமும் உயரவேண்டும்; வரலாற்றின்படி இக் காலததில் நாடு இல்லையே என்று இரக்கமுற்றது; இக்கால இந்தியாவையும் எண்ணத் தொடங்கியது.

அடிகள் தமிழகத்தில் தோன்றியவராயினும் இந்தியா முழுதையும் ஒருங்கிணைத்து நோக்குமாறு தமிழ் வரலாறு அடிக ளார்க்கு உணர்ச்சி தந்தது; ஒருகாலத்தில் இந்தியா முழுதும் தமிழ் வழங்கும் நாடாயிருந்தது புலப்பட்டது. இது வரலாறு; வரலாற்று நோக்குப்படி தமிழ்மொழியே இந்தியப் பொதுமொழி யாக இருத்தற்குரியது என்பதும் தெரிந்தது; தேயத் தொண்டர் களை விளித்துக் கீழ்வருமாறு சொல்ல அடிகளார் துணிந் தனர்.

"நடுநின்று நோக்கவல்ல உண்மைத் தேயத் தொண் டர்கள் உளராயின், இவ்விந்திய நாட்டுக்கு மிகப் பழைய மொழியாய் இருப்பதுடன் இன்றுகாறும் பலகோடி மக்களாற் பேசப்பட்டுவரும் உயிருடை மொழியாயும், இவ்விந்திய மக்களை எல்லாத் துறையிலும் மேலேற்றத் தக்க பல சீரிய நூல்களை உடையதாயும் உள்ள தமிழ்மொழியையே இவ்விந்திய தேயம் முழுமைக்கும் பொதுமொழியாக்க அவர் முன்வந்து முயலல் வேண்டும்."

—அறிவுரைக்கோவை, (இந்தி பொதுமொழியா என்னும் பிரிவு) பக். 176.

இக்காலத்தில் இந்தியா பன்மொழி நாடாகவும், பல சமய நாடாகவும், பல சாதி நாடாகவும் தோன்றினாலும், எல்லாரும் ஒரு தமிழ்க் குடும்பமே என்பது அடிகளார் உள்ளம்! நூல்களில் பலப்பல இடங்களில் இந்தியா முழுமையுமே ஒருங்குநோக்கி அடிகள் குறிப்பிடுவர். சைவசமயமே இந்து சமயம் என்பதும் அவர்கள் கொள்கை.

"'இந்து சமயம்' என்பது யாது என்று உண்மையான் ஆராயும்வழி அதுவே 'சைவ சித்தாந்தம்' என்னும் வேறு பெயரான் வழங்கப்படுவதென்பது இனிது புலப்படா நிற்கும்"

—சைவசித்தாந்த ஞானபோதம், பக். 48.

என்றது காண்க; இதை அடிகள், 'இந்து சமய உண்மைகள்' என்னும் பிரிவில் விரிவாகக் காரணம் கூறி ஆராய்வர்.

பழந்தமிழ்க் கொள்கையே சைவசமயம் என முழங்கிய அடிகள் அச் சைவ சித்தாந்தமே இக்காலத்தில் 'இந்து சமயம்' எனவும் வழங்குகின்றதென்று முடித்துக் கூறுவார்; பனிமலை தொட்டுக் குமரி வரையும் இந்து சமயிகள் எனப்படும் சைவ சித்தாந்திகள் எங்கும் பரவியிருக்கின்றனர் என்பார், இங்ஙனம் இந்து மக்கள் அனைவர்க்கும் பொதுவாகவும் அடிகளார் உயர் நோக்கம் ஓங்கி யிருந்தது; அவர் வாக்கு ஒன்று:

"ஓ, இந்திய மக்களே! நீங்களும் உங்கள் கால்வழியும் மற்ற நாட்டவரைப் போலவே எல்லாச் செல்வங்களும் பெற்று இன்பத்தோடு நீண்ட காலம் உயிர் வாழவேண்டின், யாங் கூறுவதைச் சிறிது செவி சாய்த்துக் கேட்டு அதன்படி நடக்க முந்துமின்"

—மக்கள் நூறுண்டு உயிர் வாழ்க்கை, பக். 147.

என்று இந்திய நோக்கிற் பேசுவது இங்கு நினைவுகூர்தற் குரியது!

**கல்வி நலம் :**

கல்வி என்பது ஆழ்ந்து நோக்குதல்; அப்படி என்ன இருக்கிறது ஆழ்ந்து நோக்க? எதிரில் உலகந்தான் இருக் கிறது! உலகம் என்ருல், மக்களும் சிற்றுயிர்களும் தேவர்களும் அடங்குவர்;

நூல் நிலையங்களிற் காணப்படும் நூல்களெல்லாம், அவை எந்த மொழியில் எந்தத் துறையில் இருந்தாலும், இந்த உலகங்களையும் அவற்றிலுள்ள உயிரினங்களையும் பற்றி வருவன வாகவே இருக்கின்றன; ஆழ்ந்து நோக்கினுல் இவற்றின் அடிப்படையில் மெய்ப்பொருள் விளங்குதலைத்தான் காண நேரும். கல்வி என்பது ஆழ்ந்த கல்வியாக இருப்பதோடு மெய்க்கல்வியாகவும் இருக்கவேண்டும். அதற்காகத்தான் திருவள்ளுவர் தமது தமிழ் மறையில் 'மெய்யுணர்தல்' என்று ஓர் அதிகாரம் நிறுவி, 'உண்மைக் கல்வி'யையும் அறிவுரைத் தார். உலகியற்கையில் மெய்ப்பொருளுங் கலந்திருப்பதனுல் அப்படி அவர் ஆழ்ந்து மெய்யை அறியும்படி அறிவுரைக்க வேண்டிய கட்டாயம் நேர்ந்தது!

ஆழ்ந்து ஆராய்வதும், ஆராய்ந்து மெய்யைக் காண வேண்டுமென்னும் நோக்கங் கொள்வதும், கல்வி நலத்தில் உயர்ந்த நோக்கமாகும்; அடிகளார் இவ்வுயர்ந்த நோக்கத்திற் சிறந்தவர் என்பது யாவரும் அறிந்ததே! வாழ்நாள் நெடுகக் கற்றுக்கொண்டிருந்தவர் அடிகள்; கற்பதும், உயர்ந்த நூல்களையே; அவற்றையும் ஆழ்ந்து ஆழ்ந்து கற்பர்; மெய்ப்

பொருளுங் காண்பர்: எப்பொருள் எத்தன்மைத் தாயினும், யார் யார் வாய்க் கேட்பினும் அப்பொருளின் மெய்ம்மை என்ன என்றறிவதே அடிகட்கு இயல்பாய் விட்டது! எழுதுதலைவிடப் படித்தலே எனக்கு இன்பம் பயக்கிறது' என்று அடிகளார் அடிக்கடி கூறுவார்கள். உலக மொழியாகிய ஆங்கிலத்தில் புலமை படைத்தவர்களாதலால், உலக நாடுகளின் கலைகள் பலவும் அறிந்து உண்மை நோக்கில் எண்ணிப் பார்த்து மக்களுக்கு அறிவுரை வழங்கவும் வாய்ப்பிருந்தது. பிறர்க்கென முயலும் உயர்ந்த நோக்கத்தால் அதற்குரிய பெரும் புலமையை அடிகள் அடையவும், அறிவுரைக்கவும், அனைவரும் ஒன்றி யிருந்து கேட்கவும் நேர்ந்தது புதுமையன்று; தகுதியான விளக்கம் வேண்டும் என்றால், அதற்கு அடிகளிடம் செல்ல வேண்டும் என்னும் உணர்வு நாடெங்கும் தோன்றிப் பரவியது!

கல்வியிற் பழைய தமிழகக் கல்வி சங்க நூற்கல்வியாயிருக் கிறது! அவற்றின் பகுதிகளே பிற்காலக் கல்விகள்; பிற்காலத் திற் பொய்ம்மைப் போக்குகளும் அவற்றோடு கலந்து மலிந்தன; இதனால் சங்கச் சான்றோரைப் பொய்யாச் செந்நாவினர் ஆக்கினர்; அவர்கள் நூல்களும் பொய்யா மொழிகளாயின; தலைசிறந்த மறைநூலாகிய திருக்குறள், 'பொய்யாமொழி' என்றே பெயரெடுத்தது!

சங்க நூல்களைப் பெரும்புலவர் பலர் பேருழைப் பெடுத்துப் பதிப்பிட்டுதவினர்; ஆசிரியர் மறைமலையடிகள் போன்றோர் அவற்றின் மெய்ம்மையில் ஈர்ப்புண்டு, தமிழ்ச்சுவையாகிய அம் மெய்ச்சுவையை ஆழ நுகர்ந்து அவற்றின் அழகுகளை யாவரும் உணர்ந்துசுவைக்கும்படி, நாகரிக அறிவும் விம்மிதங்கொள்ளும் முறையில் மிகத் தெளிவான விளக்கங்கள் கொடுத்து உதவி னார்கள்; சில சான்றுகள் வருமாறு:

"பழந் தமிழிலுள்ள நூல்களெல்லாம் உள்ளவற்றை உள்ளவாறே நுவல்வன; மக்கள் தம் மனமொழி மெய்களால் நினைப்பனவும் சொல்வனவும் செய்வனவுமெல்லாம் தூயனவாய் இருக்க வேண்டுமென்று வற்புறுத்துவன; மக்கள் வாழ்க்கை யானது அன்பையும் அறத்தையும் இரு கண்களாகக் கொண்டு ஒரு தெய்வ வழிபாடாகிய உயிருடன் கூடி உலவ வேண்டுமென உயர்த்துக் கூறுவன.

"மிகப் பழைய மொழிகளில் தமிழ் ஒன்றைத் தவிர, மற்றையவெல்லாம் இஞ்ஞான்றுள்ள எந்த மக்கட்குழுவினரா லும் பேசப்படாமல் இறந்தே போய்விட்டன.

"தமிழ் மொழி, ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே தொட்டு இயல் இசை நாடக இலக்கணங்களும், மக்கள் வாழ்க்

கையின் பல துறைகளிலும் அறிவை விளக்கி இன்பத்தை ஊட்டும் அரிய பெரிய பல இயற்றமிழ் இலக்கிய நூல்களும் ஆயிரக்கணக்காக உடையதாய் இன்றுகாறும் பலகோடி மக்களாற் பேசவும் எழுதவும் பயிற்சி செய்யவும் படும் உயிருடை நன்மொழியாய் உலவி வருகின்றது''

(அறிவுரைக்கோவை, பக். 161, 175)

''தமிழ் மொழியானது ஆறரைக்கோடி இந்து மக்கட்கும் பொது மொழி.

''பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்னே தொட்டு இன்று காறும் வழங்கும் தனிப் பெருஞ் சிறப்பு வாய்ந்த தனித் தலைமை மொழி!

''ஓர் ஊரில் கற்றறிவுடையார் ஒருவர் இருப்பினும் அவரால் அவ்வூராரெல்லாரும் திருத்தமடைவர்;...திருத்தங்க ளெல்லாம் அவரறிந்தும் அறியாமலும் யாண்டும் பரவிக் கொண்டே யிருக்கும்.

''எந்த நாட்டில் தொன்றுதொட்டுக் கற்றோர் மிகுதியாய்ப் பல்கிவருவரோ அந்த நாடு வளம் பெறும்;...அவர் வழங்கும் மொழி மிகுந்த சிறப்புடையதாய் நிலைபெறும்''.

''தமிழ் நாட்டிற் பண்டைக் காலத்துக் கற்றறிவுடைய சான்றோர் கணக்கின்றி இருந்தனர்; அவர்களால் திருவாய் மலர்ந்தருளப்பட்ட அளவிறந்த நூல்களும் அறவிறந்த பாட்டுக் களுமே சான்றும்''

—பண்டைக்காலத் தமிழரும் ஆரியரும் பக். 16, 17, 57, 104, 105.

"வேறெந்த மொழிகளிலுங் காணப்படாத தொல்காப்பியம், திருக்குறள், திருவாசகம், சிவஞானபோதம் திருத்தொண்டர் புராணம் முதலான ஒப்புயர்வில்லா இலக்கண இலக்கிய நூற் பெருஞ் செல்வங்கள் வாய்ந்த மொழி''

—இவையுமது பக். 185.

''அறிவின் ஏற்றத் தாழ்வு கண்டு, உயிரினங்களை ஆறு வகையில் அடக்கிக் காட்டிய மிகப் பழைய நூல் தமிழ் மொழியி லுள்ள தொல்காப்பியத்தைத் தவிர வேறெந்தப் பழைய மொழி யிலும் எந்தப் பழைய நூலிலும் இல்லாமை கருத்திற் பதிக்கற் பாலது.''

"தொல்காப்பியம் எழுதப்பட்ட காலத்தே செந்தமிழ் நாட்டின்கண் வழங்கிய செந்தமிழ் மறைகள் நான்கு.

''அந்நான்மறை வல்ல துறவோரால் அறிந்து வழிபடப் பட்டகடவுள் சிவபெருமானே''

இவ்வுரைகளெல்லாம் அடிகளாரின் உயர்ந்த நோக்கத்தை இனிது புலப்படுத்துதல் காண்க. நாட்டவரிற் பெரும்பாலார் எழுத்தும் அறியாதவராயிருப்பதும், சிறிது கற்றவரென்பவர், புலமைவாயாதவராயிருப்பதும், நன்கு கற்றவரென்பவர், தமது மொழியில் உயர்வெது என்று அறியாதவராய்த் தம் புலமைச் சிறப்பையே பெரிது பாராட்டிக் கொள்பவராய்ச் சேவையிற் கருத்தில்லாமல் இருப்பதும் அயல்மொழிகளில் பலர் நாட்டமும் பெருமையும் புலமையுங்கொண்டு தாய்மொழியைப் புறக்கணித்து அதன்கண் அன்பே இல்லாதவராய் இருப்பதும், அடிகள் நெஞ்சத்தை இறுக்கிப் பிழிந்து, உயர்ந்த நிலையில் தமிழகம் வளரும்பொருட்டே, பொதுத் தொண்டாற்றும் பெருநிலையில் தம்மை ஒப்படைத்துக்கொள்ளும்படி செய்துவிட்டன !

அறிவு நலம் :

இங்கே 'அறிவு' என்பது, மனத்தாற் பகுத்தறிவதன்று; மன அறிவு, எதையும் நல்லது இது, தீயது இது எனப் பகுத்தறிதல் மட்டும் வல்லது; பகுத்தறிந்தபடி தீயதை நீக்கி நல்லதைச் சேர்த்து நாளுங் கடைப்பிடித் தொழுகுதல் மன அறிவுக்கு இயலாது; ஆனல் தமிழ் மறைக்குரவர், ''தீது ஒரீஇ நன்றின்பால் உய்ப்பதுஅறிவு'' என்று அறிவுக்கு ஓர் இலக்கணங் கூறுவார்; நடத்தைக்குக் கொண்டுவரும் இந்த அறிவுதான் 'உயிரறிவு' எனப்படும்.

உயிரின் தன்மையாயிருப்பது உயிரறிவு; மனம் ஒரு கண்ணுடி போன்றது; அதில் இந்த உயிரறிவு நிழலாடிப் 'பகுத்தறிவு' எனப்பட்டது. அது, உண்மை யறிவன்று; கண்ணுடியில் தோன்றும் நிழலறிவு.

மனம் என்பது தன்னியல்பில் அறிவில்லாத கருவி; மாந்தர்க்கு வாய்ந்திருக்கும் முப்பத்தாறு கருவிகளில் ஒன்று; முப்பத்தாறும் அறிவில்லாதவை; ஆனல் ஒன்றைவிட ஒன்று நுண்ணியது! உயிரின் அறிவு இக் கருவிகளில் நிழலாடினுல், இக் கருவிகளும் அறிவுடையனபோலத் தோற்றும்.

உடம்பின் மேற்புறத்தில் இருக்கும் ஐம்பொறிகளும், வெளியில் உலகமாகக் காணப்படுகின்ற மண் நீர் முதலிய ஐம்பெரும் பொருள்களையே நோக்கும் பருவடிவின வாதலின், இப் பொறிகளைச் செயற்படுத்தும் மனம் என்பது, அகத்தில் ஒரு கருவியாய் இருந்துகொண்டு, இப் புறப்பொறிகளோடு இயைந்து புறம் நோக்கும் நுட்பக் கருவியாய் விளங்கி உதவுகிறது! நுட்பமாதலின் ஊனக் கண்ணுக்குத் தெரிவதில்லை. நிழலாடும் கண்ணுடிபோல் விளங்குகிறது! கற்பாறைபோல்

பருவகை இல்லை. அதனால் மனத்தில் தோன்றும் உயிரறிவு, கண்ணாடியில் தோன்றும் நிழலுருவங்களைப்போல நிழலறிவாய் இருக்கிறது!

மனம் இயைந்த பொறியறிவுகளும் நிழலறிவே! பொறி புலன்களாற் காணப்படும் உலக அறிவும், அது கொண்டு உலகப் பொருள்பற்றி மெய்யுணர்வின்றி எழுதப்படும் நூல்களும், பொறி புலன் முதலிய மாயைக் கருவிகளால் நுகர்ந்தின்புறும் உலக வாழ்வுமெல்லாம் வெறும் நிழல்களாய் முடிதலின், "காயமே இது பொய்யடா" எனப்பட்டது!

ஐந்தவித்து, அறிவு எங்கிருந்து வருகிறதோ அங்கு உள் திருப்பி, முப்பத்தாறு மாயைக் கருவிகளாகிய படிகளை ஏறி அவற்றால் அலையுறாமலும் அங்கங்குந் தங்கிவிடாமலும் ஒரு தெறிய மனம் வைத்து உயிரறிவு இருக்கும் உச்சியை அடைந்து உண்மையை உணர வேண்டிய கட்டாயம், மனம் படைத்த மனிதர் ஒவ்வொருவருக்கும் கட்டாயமாயிற்று. உண்மையை நாடும் உயர்ந்த நோக்கமுமாயிற்று!

ஆசிரியர் மறைமலையடிகளார் இத் திறம் அமைந்தவர்கள்; உண்மை காணும் உயர்ந்த நோக்கமுடையவராய், அகம் திருப்பிய உள்ளுணர்வினராய், எந்நேரமும் விளங்கினார்கள்; உயிரறிவோடு மட்டும் நில்லாமல் அதற்கும் அகமாய் விளங்கும் மெய்ப்பொருளை நாடும் உயர்நோக்கமுடையவராய்த் திகழ்ந்தனர்! அச் சிறப்பினால் எதனையும் நடுநின்று ஆராய்ந்து சிக்கறுத்து உண்மை முத்துக்களையே ஆழக் குளித்தெடுத்துப் பிறர்க்குக் கொடுக்கும் பேருதவியாளராய் நாளும் பிறங்கினர்! ஐந்தும் அடக்கா அறிவறிந்து ‘வாழ்ந்து, மெய்ப்பொருள் நாடி விரிவுரைகளும் நூலெழுத்துக்களும் செய்து வந்தார்கள்.

ஆடியின் நிழலுருக்களையும் நிழற் படங்களையும் காண்போர், அவற்றின் மெய்யுருவைக் காண வேட்கையுறுவர்; உற்று முயன்று காணுதலும் உடையர்; அதுபோல, உலகியற்கையில் நிழலறிவைக் காண்போர், உடனே அகந்திரும்பி அதன் மெய்யறிவைத் தேடி ஒரே ஊக்கமாய் ஒரு தெறிய மனம் வைத்து உணர முற்படுவர்; ‘ஐந்தவித்தல்’ என்பது இது; நிழலறிவை உலகியற்கையிற் காண்பதனால் உண்மையைக் காணும் நாட்டம் பிறந்தது; அதனால், உயர்ந்த நோக்கத்தில் ஐந்தையும் புறங்காணவிட்டு அகம் திரும்பி மெய்காணுதல் முறையாகுமாதலின்,

"ஐந்தும் அடக்கின் அசேதனமாம் என்றிட்டு
ஐந்தும் அடக்கா அறிவு அறிந்தேனே"

என்றார் திருமூலர்! புறம் நோக்குதல், அகந் திரும்புதற்கே யன்றி வேறில்லை; கழனிகளில் நெல் விளைத்தல், முடிவில் அகத்துக்குக் கொண்டு வருதல் வழக்கம்; அதுவே வாழ்க்கை; புறவாழ்வு வெறும் நிழல் வாழ்வு! உண்மை வாழ்வு அகத்தில் நடைபெறுவது!

இங்ஙனம் மெய்யுணர்ந்து அகத்தில் திகழ்தலாகிய அக வாழ்வும், பிறர்க்கென உயர் நோக்கில் நிகழும் போது, அது வலிவான நன் முயற்சியாய் நறறவமாய் நன் ஞானமாய்ச் சிறந்த தேனிப்பாய் நிகழ்ந்து, ''நான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம்'' என்னும் முறைமையில் ஓங்குகின்றது! இந் நிலையில் எழுகின்ற நினைவு சொற் செயல்களெல்லாம் விழுமிய வாய் உள்ளன; நாட்டை நலப்படுத்துவனவாய் விளங்கு கின்றன. மொழி நலனும் சொல் வளத்தாற் சிறக்கின்றன! செய்யும் சேவைகள், தக்காரை நோக்கி நிகழ்ந்து, கடவுட் சேவைகளாய்க் கருதப்படுகின்றன.

சேவையால் அருள் நலமும் அருள் நலத்தால் உயிரறிவு நலனும் சிறக்கின்றன! அத்தகைய அறிவு நலத்தால் கலை நலமாகிய மன நலமும், அதனால் தொழில் நலமும் உடல் நலமும் உண்டாகின்றன; மெய் வாழ்வுக்கு இம் முறைமை மருந்து!

புறத்திலிருந்து பொது முறையில் அகத்துக்குப் போய் அகத்தின் அகமாகிய கடவுள் நிலையை அடைந்து ஆற்றலுற்று அகத்திலிருந்து சிறப்பு முறையில் நினைவு சொற் செயல்களுக்கு வந்து பலர்க்கும் உதவும் பொது நலங் கொண்டு இவ்வுயர் நோக்கில் வாழ்ந்தவர்கள் அடிகளார்! அதனால் அவர், வெறும் புறத்தார் யார்க்கும் அஞ்சுவதில்லை; அருளாற்றல் இவ் வகையில் அடிகட்கு உதவி வந்தது;

''பால் நினைந்து ஊட்டும் தாயினும் சாலப்
　பரிந்து நீ பாவியே னுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி
　உலப்பிலா ஆனந்த மாய
தேனினைச் சொரிந்து புறம்புறந் திரிந்த
　செல்வமே சிவபெருமானே!''

என்னுந் திருவாசகம் இந்த நினைவு கூர்தற்குரியது! உள்ளொளி பெருக்கிப் பேரின்பம் சொரிந்து புறப்புறம் திரிந்து உதவும் பெற்றியனாய் அடிகட்குச் சிவபெருமான் பாதுகாத்து நின்றான்; இது நாயன்மார் திறம்; அடியார் மாண்பு! அடிகளுக்கு அமைந்த இப் பயன்படும் மெய்த்திறம், மேலெடுத்துக் காட்டிய அடிகளார்

நூலுரைகளாலேயே நன்கு தெளியப் படுமாயினும், இங்கும் இரண்டொன்று எடுத்துக் காட்டலாம்:

"உரிமை நண்பர்கள், உலக இயற்கை உயிர் இயற்கைக ளெல்லாம்...வரையறை செய்து இலக்கணம் எழுதிய ஆசிரியர் தொல்காப்பியரை ஒத்த ஆசிரியரையாயினும், அல்லாதவர் அருளிச் செய்த தொல்காப்பியம் போன்ற பிறிதொரு நூலை யாயினும் இன்றைக்கு நாலாயிர ஆண்டுகளின் முன் நாகரிகம் எய்திய எத்தேசத்திலாயினும் எம் மொழியிலாயினும் காட்டுதல் கூடுமோ? நடுநிலை திறம்பாதுரைமின்கள்!"

"தமிழர், வரலாற்றுக் காலத்துக்கு முன்னும், மிக்க நாகரிகம் பெற்று வாழ்ந்தனர்! இற்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகளின் முன்னே நமது செந்தமிழ் மொழி எவ்வளவு திருத்தம் பெற்று உலாவியது! அந் நாட்களிலிருந்த கற்ரூேர் நுண்ணறிவு, எவ்வளவு தெளிவாக அவரியற்றிய பாக்களிலே துளும்பி ஒளி வீசுகின்றது! அப்போதிருந்த நன்மக்களெல் லாரும் எவ்வளவு இன்புற்று வாழ்ந்தனர்கள்! என்று நினைக்க நினைக்க எம் உள்ளம் வரைகடந்த இன்பத்தாற் பொங்கு கின்றது!"

—பண்டைக் காலத்தமிழரும் ஆரியரும், பக். 46.

அக் காலத்தில் எழுதப்பட்ட தெய்வத்திருக்குறளுக்கு இணையான நூல் இவ்வுலகத்தில் உண்டோ? அஃது உயர்வு ஒப்பில்லா உவரா அமிழ்தமன்ரூே!

உள்ளன உள்ளபடி கூறிய முழுக் காப்பியங்களான சிலப் பதிகாரம் மணிமேகலை என்பவற்றின் முன் தலையெடுத்து நிற்கும் வேறு காப்பியங்கள் இவ்வுலகில் எந்த மொழியிலேனும் உளவா? இல்லையே!

மக்கள் மெய்யுணர்வின் இயற்கையினைப் பகுத்து விளக்கிய இறையனு ரகப்பொருளுரை போன்ற நூல் இவ் விரிகட லுலகினும் இல்லையே!

கலித்தொகையிலுள்ள இயற்கைப் பொருள் நுட்பமும் பல திறப்பட்ட மக்கள் வழக்க ஒழுக்க ஆராய்ச்சியும் வேறு எம் மொழியிலாயினும் உள்ளனவா!

மனு முதலிய அறநூல்க ளெல்லாம் நாலடியாரை ஒக்குமோ!

ஆ! அக் காலத்துத் தோன்றிய திருச்சிற்றம்பலக் கோவை யார் என்னும் அவ் வொரு நூலை நோக்கினும் தமிழ்மொழியின் அமைதியும் சிறப்பும் இனிது புலப்படுமே!

நண்பர்காள்! இங்ஙனம் சீர்திருத்தமுற்று நிலாவிய இச் செந்தமிழை வழங்கிய மக்கள் எத்துணை நாகரிகமுடையராய் இருந்தனராவர்!

நாற்குல வகுப்பு, நாலெல்லை வகுப்பு, நான்மறை வகுப்பு முதலாயின வெல்லாம் செந்தமிழ் நிலத்தே பண்டைக் காலத்துத் தமிழ் மக்களாற் செய்யப்பட்டுப் பின் போந்து கலப்புற்ற ஆரியராற்றழுவி வேறு வேருக அவர் மொழியினும் செய்து கொள்ளப்பட்டன என்றறிக.

"அறிவிற் சிறந்த தமிழ் மக்காள்! பழிப்புரைக்குச் சிறிதும் அஞ்சன்மின்! எவர் யாது கூறினும் உண்மை கரக்கப்படாது"

"நமக்கும் மற்றும் அறிவுடையார் எல்லார்க்கும் சிறந்த பிரமாண நூல்களாயுள்ள தொல்காப்பியம் திருக்குறள் முதலி யனவே நமக்குச் சாலும் என்று மனந் திருந்துமின்கள்!"

"பிறர் கூறும் பகட்டுரைக் கஞ்சி உண்மையைக் கைவிட்டு விடாதீர்கள்"

—*பண்டைக் காலத் தமிழரும் ஆரியரும், பக். 17, 18, 44, 45.*

இங்ஙனம் சேவையில் உண்மை கடைப்பிடித்தல் தெய்வ வழிபாட்டின் அடிப்படை நலம்; அகத்திலும் புறத்திலும் அவ் வுண்மை அமையாமல் எவ்வளவுதான் பூவும் நீருங்கொண்டு தனிமையிலும் திருக்கோயிற் பொதுமையிலும் பகட்டாக வழி பாடுகள் நிகழ்த்தினுலும் இறைவன் அப் பொய்ம்மைக்கு அருள் செய்து விடமாட்டான்; நகைப்பான், நாணுவான்!

"பொக்க மிக்கவர் பூவும் நீருங் கண்டு
நக்கு நிற்பன் அவர்தமை நாணியே"

என்ருர் திருநாவுக்கரசர்!

"கரவாடும் வன்னெஞ்சர்க்கு அரியான்"

அப் பெருமான்! காரணம், கடவுள் எப்போதும் உண்மையோடும் உண்மை அடியார்களோடும் விரவாடும் பெருமான்! 'அறம்' என்னும் உண்மையிலேயே உறைபவன்!

உண்மைகள் அவரவர் நிலைக்கேற்ப உணரப்படும்; ஒருவர், தம் நெஞ்சறிந்ததனை நினைவு சொற் செயல்களிற் கடைப்பிடிக் கலாம்; ஒருகால், அது, மெய்ம்மைக்கு வேருகவும் இருக்கக் கூடும்; ஆயினும், அறிந்த வரையில், அஃது, உண்மையொடு படுதலின், ஆண்டவன் அவர் நிலையறிந்து அருள் செய்யவே மூந்துவன்! கண்ணப்ப நாயனுர், செருப்படியும் எச்சில் நீரும்

சூடிய பூவும் இறைச்சிப் படையலுங் கொண்டு திருக்காளத்தி நாதரை வழிபாடு செய்தது, முறையான வழிபாடு ஆகாதது தான்; இறைவன் ஏற்கத் தக்கது மன்று; ஆயினும் அது கண்ணப்பரின் நெஞ்சறிந்தது! நெஞ்சின் உண்மை கருதத் தக்கது! இறைவன் அவ்வுண்மைக்கே மகிழ்ந்து அவர்க்கு அருள் செய்தான்!

மறைமலையடிகள் தம் நெஞ்சறிந்த உண்மைகளை மறைப்ப தில்லை; அஞ்சாமல், கூசாமல், வெளிப்படையாய் வெளியிட்டு வந்தார். அவை அடிப்படை உண்மைக்கும் ஒத்துவரக் கூடியனவே! கண்ணப்பர் வழிபாடுபோல் ஆகாதன அல்ல; திருவள்ளுவர் கருத்துப்படி, யாண்டும் மெய்ப்பொருள் காண்ப வராக அடிகள் விளங்கினர்; அதனால், ஆண்டவன் திருவரு ளுக்கும் அவர் இலக்கானர்!

சேவையால் உயிரறிவில் அருள் துளும்புதலின், அறிவு அன்பாக மாறுகின்றது; பிரைமோரால் பால் தயிராவதுபோல, அருள் விழ்ச்சியால் உயிரறிவு அன்பாய் மாறுகிறது! அதிலிருந்து உயிர்கள் தந்நலம் நீங்க முற்படுகின்றன. உயிர்கள் சேவைக் காக அன்றித, தமது வாழ்வுக்காகப் புறம் வருதல் குறை கின்றது; பற்றற்றுப் பொதுநலங் காண்பதே, அருளுடைமையில் தலைப்படுதலே, உயிர்களின் நோக்கமாயிருக்கின்றன.

அன்புடைமையும் அருளுடைமையுமே இப்போது உயிரின் நிலை; மண் முதல் நாதம் வரையில் அமைந்த அறிவில்லாத மாயைக் கருவிகள் இனிச் சேவைகளாகிய தொண்டுகளுக்கே பயன்படும்; தொண்டுகள் 'அறம்' எனப்படும்; அறஞ் செய்ய விரும்புதல் இவ்வுயர்ந்த நோக்கத்திலேதான் உண்மையாய்க் கைகூடும். அன்பும் அருளும் அறனுமாகிய இம் மூன்றும் உயிர்க்கு நேர்ந்தால், கருவிகளை அவை கடந்தன ஆகின்றன; அஃதாவது, அறிந்து சேவையில் ஆளும் திறம் பெறுகின்றன; சேவையால் மேன்மேலும் பற்றறுகின்றன. பற்றற்றுத் திருவருளையே பற்றி நிற்கின்றன;

''யாம் இரப்பவை
பொன்னும் பொருளும் போகமுமல்ல நின்பால்
அன்பும் அருளும் அறனும் மூன்றும்''

என்னும் 'பரிபாடல்' வரிகள் இங்கு நினைவுகூரத் தக்கன!

அடிகளார் எந் நிலையிலும் இம் மூன்றும் மேற்கொண்ட செம்மலார்! அன்பே சிவமாவது இந் நிலையிலாதலின், அடிகள் எந்நாளும் சிவநெறியில் அழுத்த முடையவராய், அகம்புறம்

இரண்டும் சிவத்துக்கே ஒப்படைத்து ஒழுகி வந்தார்! இவ்வுண்மை இயைபுகளை அறியாதார், அடிகளார் சமய நெறியில் அழுத்தமாயிருப்பதுபற்றி, 'விஞ்ஞானக் கல்வி வாய்ந்த இவர் இவ்வாறும் இருக்கின்றனரே' என்று வியப்பதும் உண்டு.

அறிவு அன்பாய் மாறி அருளுடைமையில் உயர்வதே இறை தொடர்பினாலேதான்; ஆதலால், இறை தொடர்பு இப் பக்குவத் திறத்துக்கு இன்றியமையாத தென்பது புலப்படும். இறை தொடர்பினால் 'அருள்' என்னுங் குழவி தோன்றுகிறது; அன்பு தாயாகிறது; இறை இயல் தந்தையாகிறது; அன்பு சிவமாகிறது; அதனால் அருட் குழந்தை, சேவைக்கு வாய்ப்பாய்த் தோன்றுகிறது! "அருளென்னும் அன்பீன் குழவி" என்று ஈனுதலைத் திருவள்ளுவரும் நினைவுகூர்ந்தார். தொடர்பு எதுவும் இன்றிக் குழந்தை தோன்றாதே! இறை தொடர்பு இவ்வாற்றால் உயிரன்புக்கு இன்றியமையாத தாயிற்று!

முதலில் அருளுடைமையாய் (சீவகாருணியமாய்) தோன்றிய குழந்தை (திரோதான சத்தி, சேவையால் உயிரன்பு முற்றிலும் பற்றுவிட்டுக் காதலாகிக் கசிந்து, தாவுமாறு பாவையாய் (சிவசத்தி) வளர்ந்து, உயிரைச் சிவப்பேரின்பத்திற் சேர்ப்பிக்கிறது! இந் நிலையை விளக்க எழுந்தது திருச்சிற்றம்பலக் கோவையார். "அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே" என்றார் திருமூலரும்!

இவ்வாற்றால், 'உயிரினியல்பு, தன் அறிவு நிலையிலிருந்து முப்பத்தாறு கருவிகளின் மூலம் புறம் வரும் போக்கு ஒன்று' எனவும், 'அவ்வுயிரறிவு அன்பாய் மாறி அகந்திரும்பி உயிர்க்குயிராகிய சிவத்தின் நிலையை எய்துதல் ஒன்று' எனவும் அறிகின்றோம்! இச் சிவ நிலையை முற்றும் எய்துமுன், மெய்ஞ்ஞானப் பக்குவ உயிர்கள் தமக்குற்ற முப்பத்தாறு கருவிகளையும் அடக்காமல் அடக்கும் மெய்த்திறம் பெற்றுப் பயன் காணும் முறையில், சேவை செய்யும் திருத்தொண்டராய் உலகில் விளங்குவர்! பிறர்க்கென முயலும் நோன்தாளினராய்த் தமக்கென முயலா உண்மையாளராய் உயர்ந்த நோக்கத்தில் ஈடுபட்டிருப்பர்!

ஆசிரியரடிகள் இவ்வுயர் நோக்கம் உடையவர்! இவரோடு ஒத்துச் செல்லப் பிறர்க்கு இயல்வதில்லை; அடிகள் தனி நின்று மெய்த் தொண்டாற்றும் வாழ்க்கை உடையவரானார்! உயர்ந்த நோக்கத்தை எல்லாருங் கடைப்பிடிப்பது அரிதுதான்! அதனால், உலகம் (அறிவு நிறைந்தோரும் குறைந்தோரும்) நுண்மைக் குடைய அடிகளையே தாவி நின்றது! அவ்வாற்றால், பலரோடு கூட்டுண்ணும் பெருநிலை வாழ்க்கையும் அடிகட்கு அமைந்தது!

அருள்நலம் :

இதைச் 'சமய நலம்' எனவுங் கொள்ளலாம்; அம்மை யப்பர் ஓருருவாதலின், சிவநலம் தனிப்படுவதன்று! அருள் நலமே அக நலமுமாகும்!

மிக இளமையிலேயே பதினாறும் வயதில் அடிகளார் 'இந்து மதாபிமான சங்கம்' என்னும் சமய சங்கம் நிறுவிச் சைவசமய விளக்கங்கள் செய்து வந்தார்; பாலப் பருவத்தில் கிறித்தவப் பள்ளியிற் படிக்க நேர்ந்ததனால், உடன் மாணவர் முதலிய பலரும் 'இந்துமதத்தில் அபிமானம்' கொள்ளும்படி; அடிகளார் முயன்று வந்தார்கள்; பிறர்க்கென முயலும் நோன்தாள் இத் துணைச் சிறுபோதிலேயே உயர் நோக்கமாய் அடிகளுக்கு அமைந்துவிட்டது! இந்திய நோக்கமும் அப்போதே அரும் பினமை தெரிகின்றது!

அதன்பின், சைவ சித்தாந்தச் சங்கங்களிலும், அவற்றைச் சேர்ந்த அன்பர் குலத்திலும், அங்கங்கும் வந்து சொற்பெருக் காற்றிய பெரியோரிடத்திலும் இணங்கிச் சுறுசுறுப்பான நிகழ்ச்சி களில் ஈடுபட்டார்; சைவ சமயச் சொற்பொழிவுகளும் எழுத்துக் களும் பெருகின; சைவ நாடாகிய இத் தமிழகமேயன்றி இந்தியா எங்கணும் இலங்கையிலும் உலவ நேர்ந்தது; மேனாடு கீழ் நாடுகளிலெல்லாம் சமய உணர்வு பரவ முற்பட்டது! அடி களார் ஆற்றிய அருஞ் செயல்கள் அளவில்லாதவை!

சிவ சமயத்தைப் பற்றி அடிகளார் வழங்கியருளிய புது விளக்கங்கள், நாட்டவரைப் பேரறியாமையிலிருந்து எவ் வளவோ நீக்கியிருக்கின்றன.

'பிறப் பிறப்பில்லாத ஒருவரே முழுமுதற்கடவுள்; இரண் டாவதாக எவர் எவ்வளவு உயர்ந்த காரிய நிலையினரேயாயினும் அவரெல்லாம் தெய்வமல்லா உயிரினங்களே! சதாசிவ தேவர் மாகேசர், சீகண்டர் முதலிய பதமுத்தியினரும் உயிரினங்களைச் சேர்ந்தவர்களே; அவர்களெல்லாரும் உயிரினங்களில் மிகவும் உயர்ந்தவர்களாய், மிகு நுட்ப நிலைகளில் ஓங்கியவர்கள்! எல்லாம் வல்ல முழுமுதல் அம்மையின் அருள் வடிவினர்; தெய்வத்தின் சாயலாய்த் திகழ்பவர்கள்!

முழுமுதற் கடவுள் என்பவர், அம்மையப்பராய்,' இருகூற்ற ஒரு வடிவின் முதல்வராய்த் திகழ்பவர்; கடவுளுக்கு அருளுருவம் உண்டு; அது செந்நிறமும் நீலநிறமும் இயைந்தது; இவ்வுரு நிலையைத் தேனித்து அருவமுங் கடந்த செம்மை நிலையை ஒருவர் அடையலாம்.

மண் முதல் நாதம் வரையில் முப்பத்தாறு கருவிகளும் மக்கள் உடம்பில் உண்டு; வெளி உலகத்திலும் உண்டு; எல்லாம் அறிவில்லாத மாயைக் கருவிகள்; அத்தனைப் பிரிவுகளும் உயிர்களின் உணர்வு வளர்ச்சிக்கு, உணவு தெளிவடைவதற்குத் தேவையாயுள்ளன. இத் தேவை குருட்டுத்தனமாய்ச் சொல்லப் படுவதன்று; எல்லாம் காரண காரியங்கள் உடையவை!

சிவ சமயம் இயற்கைச் சமயம்; இன்னுரால் இன்ன காலத்தில் தோற்றுவிக்கப் பட்டதென்பது இல்லாததாய் முழு முதற் சமயமாய் விளங்குகிறது; பழந்தமிழ்க் கொள்கையே சைவ சமயம்; கடவுளுக்கு மாருன கொள்கைகள் சைவமாகா.

'முக்கண்ணன்' 'புண்ணியன்' 'சடையன்' என்னும் சிறப்புப் பெயர்கள் சைவசமய முதல்வனுக்கு உண்டு. பழந்தமிழ் நாட்டுச் சேவைக் கொடியாகிய நந்திக் கொடியே பழையோனுகிய கடவுளுக்குரியது!

சேவையால் பழவினைகளைத் தீர்ப்பவன் முதல்வன் ஒருவனே; பிறப் பிறப்பில்லாத அப் பெருமான் ஒருவனே உயிர்களின் பிறப்பை நீக்க வல்லவன்! அவனெருவனே மாதேவன்; எல்லாராலும் வணங்கத் தக்கவன்! வணங்கப் படுபவன்!

இக் கொள்கைகளெல்லாம் ஒருங்குடையவர்களே நால்வர்கள்! அவர்களே நமக்குக் குருமார்; எல்லாம் வல்ல இறைவனைப்பற்றி வேறுபிறரை எதற்காகவும் எந் நிலையிலும் வேண்டுதலில்லாத கொள்கையில் நிலைபெற்ற உறுதியுடையவர்கள்! அம்மையையும் மூத்த பிள்ளையாரையும் இளைய முருகனையுங் கூடத் தனியாகப் பாடாதவர்கள்; முதல்வனை, அம்மையப்பர் திருவுருவினை, நேரிற் கண்டவர்கள்! அப் பெருமானுல் ஆட் கொள்ளப்பட்டவர்கள்; பிறந்த பிறப்பில் பிறவியை அறுத்தவர்கள்; உயிரினங்களின் சேவைக்காக இவ்வுலகில் தோன்றின மேலோர்; முதல்வன் சமயத்தை விளங்க வைத்தவர்கள்!

தமிழில் முன்பு இக் கொள்கைகளை விளக்கும் நான்மறைகள் இருந்தன. அவற்றின் வழியில் திருக்குறள் என்னுந் தமிழ் மறை போன்றவை இப் போது நமக்கு உதவுகின்றன. இவையே தமிழர்க்குப் போதும்; பிறமொழி வேதங்கள் தமிழர்க்கு முக்கியமல்ல.

கொலைபுலை நீங்கித் திருநீறு சிவமணி அணிந்த செவ்வியர் சிவ நெறியினர்! 'சிவமணி' சிவபெருமானுடைய அருள் விளங்கிய நெற்றிக் கண்ணைக் குறிக்கும்; நெற்றிக் கண்ணுல் காமத்தை எரிக்கலாம்; எல்லாம் எரிந்தபின் முடிவாகத்

தேறுவது திருநீறு! 'அறம்' என்னும் விடையில் ஏறிப் பொருளின்பங்கள் ஊர்ந்து, அந்த அறத்தையே கொடியாகக் கொண்டு உயர்த்திச் செம்மை நிலையில் நிற்பது சிவநெறிச் சைவர் கடமை! இந்த அருள் வாழ்க்கையின் அடையாளமே சிவமணி திருநீறு!

நன்று உடையவன் கடவுள்; தீயது இல்லாதவன் அப் பெருமான்! அம் முழு முதல்வனையே. முதலாய முதல்வனையே அனைவரும் வணங்கத்தக்கவர்! 'அந்நிலையில் எந்நாளும் இன்பமே, துன்பமில்லை!'

என்றிங்ஙனமெல்லாம் 'அருள் நிலை' 'சேவை நிலை'கள் கொண்டு அம்மையப்பர் வணக்கத்தைச் சமயநெறியாக அடிகளார் விளக்கினர்; இவற்றிற்கான ஆராய்ச்சிகள் முடிபுகள் பலப்பல.

நாட்டுமக்கள் அனைவரும், உடம்பு நலமாய். உட்கருவிகள் நலமாய், உயிரறிவு அன்பும் அருளும் அறமுமாய்க் கனிந்து, செம்மை நிலையை அடைய வேண்டுமென்றும் உயர்ந்த நோக்கத்தில். அடிகளார் தம் வாழ்நாள்காறும் எடுத்துக் கொண்ட நன்முயற்சிகட்கு. நாட்டுமக்கள் நலத்தையே முதலில் மேற்கொண்டு தமது வாழ்வை இரண்டாவதாக வைத்துச் செய்துவந்த நற்றொண்டுகட்கு ஓர் அளவே இல்லை!

———

## இவர் இன்றேல் காவல் ஏது?

தமிழ்மட்டும் படித்தவர்கள் தமிழைச் சொன்னார்!
    சமக்கிருதக் காரர்களோ தம்மைச் சொன்னார்!
அமைதிநிறை மறைமலையார் இரண்டுங் கற்று,
    ஆம் உண்மை! தமிழ்க்கடலே உயர்ந்த தென்றார்!
உமிமூடி இருந்தாலே நெல் நான் என்றே
    உரைத்தவர்க்குப் பதரென்ன என்று சொன்னார்!
இமைஇன்றேல் விழிகட்குக் காவல் ஏது?
    இவர்இன்றேல் அன்றைக்குக் காவல் ஏது?

—கவிஞர், கா. வேழவேந்தன்

# உயிர்மெய்ம் முதல் வேர்ச்சொற்கள்

[ஞா. தேவநேயன்]

(சிலம்பு-௩௦, பரல்-௧, ௨௧ஆம் பக்கத் தொடர்ச்சி)

முல்[1]—இளமைக் கருத்து வேர்ச்சொல்.

இளமை என்பது ஓர் உயிரியின் பிறப்பிற்கும் முழு வளர்ச்சிக்கும் இடைப்பட்ட நிலைமை அல்லது காலம். அது பிறந்த நிலையினின்று தொடங்கி, புனிற்றிளமை, சிற்றிளமை, பேரிளமை என முந்நிலைப் பட்டதாகும்.

பிறப்பெனினும் தோற்றமெனினும் ஒக்கும்.

இயற்கையான தோற்றம் அல்லது இயக்கமெல்லாம் முன்னோக்கியே நிகழ்தலால். தோற்றக் கருத்தில் முன்னோக்கல் அல்லது முகங்காட்டற் கருத்து இரண்டறக் கலந்துள்ளது.

இனி, இளமைப் பருவத்திலேயே உருவச் சிறுமையும் உடல் மென்மையும் அழகு நிறைவும் மறவுணர்ச்சியும் வலிமை மிகுதியும் பொதுவாக அமைந்திருத்தலால், இளமைக் கருத்திற் சிறுமை மென்மை அழகு மறம் வலிமை முதலிய கருத்துக்களும் தோன்றும்.

முல்—முன்—முனி=யானைக் கன்று. "முனியுடைக் கவளம் போல்" (நற். 360).

முன்—முன்னி=முல்லை நிலத்தில் இயற்கையாக விளையும் ஒரு சிறு பயறு.

ஒ. நோ: L. *min*, small. இதினின்றே. minify, minim, minimum, minish, miniature, minor, minute முதலிய பல சொற்கள் திரிந்துள்ளதாகத் தெரிகின்றது.

முல்—முள்—முளை=1. வித்தினின்று முளைத்த சிறு வெளிப்பாடு "வித்திய வெண்முளை" (ஐங்குறு. 29). 2. இளமை. "முளையமை திங்கள்" (கம்பரா. கும்பக. 10). 3. மரக்கன்று. "அதன்ருள் வழியே முளையோங்குபு" (சீவக. 223). 4. சிறுபிள்ளை. 5. மகன். (பிங்.).

ம. முள, து. முளெ. க. மொளெ, தெ. மொலக்க.

முளைத்தல்=1. முளை தோன்றுதல். "ஒன்ருய் முளைத்தெழுந்து" (திருவாச. 10 : 8). 2. கதிரவன் தோன்றுதல். "காலை ஞாயிறு கதிர்விரித்து முளைப்ப" (மணி. 8 : 18).

ம. முளே, க. மொளெ, தெ. மொலத்சு.

முளை — முளையான் = சிறு குழந்தை. இந்த முளையான் பேச்சை யார் கேட்கிறது. (W.).

முள் — முளு — முசு — மூசு = பிஞ்சு. பலா மூசு. (உ. வ.). ஒ. நோ: உளு — உசு. ள — ச, போலித்திரிபு.

முள் — முட்டு. முட்டுக் குரும்பை = சிறு தென்னம் பிஞ்சு, அல்லது பனம் பிஞ்சு.

முட்டு — மொட்டு = அரும்பு. "மொட்டரு மலர்" (திருவாச. 29 : 8).

மொட்டு — மொட்டை = மணமாகாத இளைஞன். (W.) மொட்டைப் பையன் (உ. வ.).

முளு — முழு — முகு — முகிழ். ஒ. நோ: தொழு — தொகு.

முகிழ்த்தல் = (செ. கு. வி.) 1. அரும்புதல். "அருமணி முகிழ்த்தவேபோ லிளங்கதிர் முலையும்" (சீவக. 551). 2. தோன்றுதல். "மூவகை யுலகும் முகிழ்த்தன முறையே" (ஐங்குறு. கடவுள்). கூம்பும் மலர்போற் குவிதல் அல்லது மூடுதல். 'மகவுகண் முகிழ்ப்ப" (கல்லா. 7).

(செ. குன்றுவி.) 1. ஈனுதல். "அமராரா தியரை முகிழ்த்து" (விநாயகபு. 81 : 154). 2. தோற்றுவித்தல். "அற்புத முகிழ்த் தார்" (காஞ்சிப்பு. பன்னிரு. 163).

க. முகுள் (ഉ).

முகிழ் = 1. அரும்பு. "குறுமுகிழ வாயினுங் கள்ளிமேற் கைந் நீட்டார்" (நாலடி. 262) 2. குமிழி. "பெயறுளி முகிழென" (கலித். 56).

முகிழ் — முகிழம் = மலரும் பருவத்துப் பேரரும்பு. (சது.).

வ. முகுல.

முகிழ் — முகிழி, முகிழித்தல் = முகிழ்த்தல்.

முகிழி — முகிழிதம் = முகிழிதம் = அரும்பல், அரும்பு. "பொன்னின் முகிழிதம் விளைத்து" (குற்றா. தல. நாட்டுச். 9.)

முகிழ் — முகிள். முகிழம் — முகிளம். முகிழிதம் — முகிளிதம்.

முகிள் — முகுள் — முகுளம் = 1. அரும்பு. "பங்கய முகுளந் தன்னைக் கொங்கையாப் படைத்த" (திருவாலவா. 4 : 14). 2. ஒரு கையின் ஐந்து விரலும் நிமிர்ந்து நுனி பொருந்திக் கூம்பி நிற்கும் இணையா வினைக்கை வகை. (சிலப். 3 : 18, உரை).

வ. முகுல.

முகுளம்—முகுடம்=மணிமுடி. "முகுடமும் பெருஞ் சேனையும்" (பாரத. குரு. 14). 2. முடியுறுப்பு ஐந்தனுள் ஒன்று. (திவா.).

முகுடம்—வ. முக்குட்ட.

முகுடம்—மகுடம்=1. மணிமுடி. "அரக்கன்றன் மகுடம்" (கம்பரா. முதற்போ. 246). 2. தேர்க் கும்பம். 3. ஓலைச் சுவடியின் மணிமுடிச்சுக் கொண்டை.

மகுடம்—வ. மக்குட்ட.

பேரா. பரோ தம் 'சமற்கிருத மொழி' என்னும் நூலின் இறுதியில், முகுடம் (மகுடம்) என்பது திரவிடச் சொல்லென்று குறித்திருத்தல் காண்க.

முகிள்—முகுள்—முகுளி. முகுளித்தல்=குவிதல். "முகுளிக்கும்...அரவிந்தம்" (தண்டி. 62).

முகு—முகை=அரும்பு. "முகை மொக்குளுள்ளது நாற்றம் போல்" (குறள். 1274).

முகைதல்=அரும்புதல்.

முகு—மொகு—மொக்கு = பூ மொட்டு. 2. மொட்டுப் போற் செய்யப்படும் ஓவிய வேலைப்பாடு. 3. நிலத்தின்மேல் இடும் பூக்கோலம்.

க. மொக்கு (gg) தெ. மொக்க (gg).

மொக்கு—மொக்குள்=1. மலரும் பருவத்துப் பேரரும்பு. "முகைமொக்கு ளுள்ளது நாற்றம் போல்" (குறள். 1274) 2. நீர்க்குமிழி. "படுமழை மொக்குளின்" (நாலடி. 27). க. முகுல் (g).

மொக்குள் — மொக்குளி. மொக்குளித்தல் = 1. குமிழியுண்டாதல். (W). 2. திரளுதல். (யாழ். அக.).

க. முக்குளிசு

முள் — முண் — முண. முணமுணத்தல் = வாய்க்குள் மெல்லப் பேசுதல். "சுற்றிவந்து முணமுணென்று சொல்லும் மந்திரம் ஏதடா" (சிவவாக். 58).

முண—முணு. முணுமுணுத்தல்=வாய்க்குள் மெல்லப் பேசுதல்.

முணு — முணுக்கு. முணுக்கு முணுக்கெனல் = குழவி தாய்ப்பாலைச் சிறிது சிறிதாக உறிஞ்சிக் குடித்தல்.

முண்—மண்—மணி=சிறியது.

மணிக்கயிறு, மணிக்காடை, மணிக்காக்கை, மணிக்குடல், மணிக்கை, மணிக்கோவை, மணித்தக்காளி, மணித்துத்தி, மணிப்புறா, மணிப்பயறு முதலிய கூட்டுச் சொற்களை நோக்குக.

முணுக்கு—முடுக்கு=சிறுசந்து.

முடுக்கு—முடுக்கர்=குறுந்தெரு. "முடுக்கரும் வீதியும்" (சிலப். 5 : 187).

முடுக்கு—முக்கு=சந்து. ம. முக்கு.

முக—முகம்=1. தோற்றம். "களிமுகக் களிறன்னான்" (சீவக. 298) 2. முன்பு. "ஈன்றாள் முகத்தேயு மின்னாதால்" (குறள். 923). 3. தலையின் முன்புறம். 'முகத்தா னமர்ந் தினிது நோக்கி' (குறள். 93) 4. நோக்கு "புகுமுகம் புரிதல்" (தொல். மெய்ப். 13) 5. முகமன் "முகம்பல பேசி யறியேன்" (தேவா. 742 : 2). 6. வீட்டின் முன்புறம். 7. நாடகச்சந்தி ஐந்தனுள் முதலது (சிலப். 3 : 13, உரை). 8. தொடக்கம் (W.). 9. முகத்தில் முன் நீண்டுள்ள மூக்கு.

முகஞ்செய்தல்=1 தோன்றுதல். "முகஞ்செய் காரிகை" (பெருங். உஞ்சைக். 35 : 49). 2. முன்னுதல். "தோற்றி னான் முகஞ்செய் கோலம்" (சீவக. 675). 3. நோக்குதல். 'முன்னினான் வடதிசை முகஞ்செய்து" (சீவக. 1408).

முகக்கொம்பு, முகதலை, முகமண்டபம், முகவாசல், முகவுரை; உரைமுகம், கழிமுகம், துறைமுகம், நூன்முகம், போர் முகம் என்னும் கூட்டுச் சொற்களில், முகம் என்னுஞ் சொல் முன்புறத்தையே குறித்தல் காண்க.

முகமை=1. முன்மை. 2. தலைமை. அவன் முகமையா யிருந்து கூட்டத்தை நடத்தி வைத்தான். (உ. வ.).

முகம்—முகன் (போலி).

முகம், முகன்—வ. முக (mukha).

முகன்—முகனை=1. முன்புறம். 2. தொடக்கம். 3. உரைநடைச் சொற்களின் அல்லது செய்யுட்சீர் அடிகளின் முத லெழுத்துக்கள் ஒத்து வருதல். 4. தலைமை. அவன் முகனை பண்ணுகிறான். (W). 5. அந்தொடியே, நான்வந்த முகனை யிலே அவன் போய்விட்டான் (W.). 6. முன்சினம். உனக் கேன் இவ்வளவு முகனை? (உ. வ.).

முகனைக்கல்=கோயில் முதலியவற்றில் வாசற்காலின் மேலுள்ள உத்தரக்கல்.

முகனைக்காரன்=முதலாளி. (W).

முகனை முடிவு=தொடக்க விறுதி. (W).

முகனை - மோனை = 1. முதன்மை. "மோனை மங்கலத் தியற்றுவ" (உபதேசகா. சிவபுண். 63). 2 செய்யுளடியிற் சீர்தொறும் முதலெழுத்து ஒன்றிவரத் தொடுப்பது "அடி தொறுந் தலையெழுத்தொப்பது மோனை". (தொல். செய். 91).

முகம்—முகர்=1. முகம். 2. மூக்கு.

முகர்தல்=மணமறிதல்.

முகர்—மோர்—மோ. மோத்தல்=மணமறிதல். "மோப்பக் குழையும் அனிச்சம்" (குறள். 90).

மோ - மோப்பு—மோப்பம்=மண முகர்வு.

முகர்—முகரி=1. தொடக்கம். 2. முன்புறம். 3. தலைமை. 4. மூக்கின் அடி.

முகரிமை=1. தலைமை. "முகரிமை யடைந்தவன் தோல் முகத்தவன" (கந்தபு கயமுகனுற். 49). 2 பேரறிவு. (பிங்). "முகரிமைசால் நற்றவர்" (சேதுபு. பலதீ. 30).

முகர் — முகரை = 1. பழிக்கப்படும் முகம். அவன் முகரையைப் பார் எப்படி யிருக்கிறதென்று (உ. வ.). மூக்கினடி. "முகரையா லுழுத தொய்யில்" (திருக்காளத. பு. கண்ணப்ப. 3). மு.

இந். முகரா (mukhra).

முகரை—மோரை=1. பழிக்கப்படும் முகம். 2. முக வாய்க்கட்டை.

தெ. மோர, க. மோரெ.

முகவாய்—மோவாய்=முகத்தில் வாய்க்குக் கீழுள்ள நாடி. "குச்சி னிரைத்த குரூஉமயிர் மோவாய்" (புறம். 257).

முகு—முக—முகப்பு=1. முற்பகுதி 2. வீட்டின் முன்புறக் கட்டிடம். 'முகத்தணிந்த முகப்பு" (அரிச். பு. இந்திர 20). 3. அணிகலங்களின் முன்புறப் பொருத்துவாய். 4. சேலையின் முகதலை. 5. முன்னிலை. "இருந்திடா யெங்கள்கண் முகப்பே" (திவ். திருவாய் 9 : 2 : 7)

முள் — மள் — மள்ளன்=1. இளைஞன். "பொருவிறல் மள்ள" (திருமுரு. 262). 2. மறவன், படைமறவன் "களம்புகு மள்ளர்" (கலித். 106). 3. குறிஞ்சிநில வாணன். (சூடா.).

மள்—மள—மழ=1. இளமை. "மழவும் குழவும் இளமைப் பொருள" (தொல். உரி. 14). 2. குழந்தை. "அமுமழப் போலும்" (திருக்கோ. 147).

மழ—மழவு=1. இளமை. 2. குழந்தை.

மழவு—மழவன்=1. இளைஞன். "மழவர்த மனையன மணவொலி" (கம்பரா. நாட்டுப். 50).

மழ—மழம்—மழல்—மழலை=1. இளமை. "பெருமழலை வெள்ளேற்றினர்" (தேவா. 579 : 5). 2. குழந்தைகளின் இனிய, திருந்தாச் சொல். 'தம் மக்கள் மழலைச்சொற் கேளாதவர்" (குறள். 66).

மழ—மழம்—மடம்=1. இளமை. "அஞ்சன் மடவனமே" (நள. சுயம். 27). 2. இளமைக்குரிய மென்மை. "தெளிநடை மடப்பிணை" (புறம். 23). 3. இளமைக்குரிய அழகு. "மடக் கணிர்சோரும்" (சிலப். 17, உரைப்பாட்டு மடை). 4. இளமைக் குரிய அறியாமை. "கொடை மடம் படுதலல்லது படைமடம் படான்" (புறம். 142). 5. பெண்பாற் குணம் நான்கனுள் ஒன்றுன (கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமையாகிய) பேதைமை. "வாலிழை மடமங்கையர்" (புறம். 11).

மழ—மட—மடப்பு—மடப்பம்=1. மென்மை. 2. இணக்கம். 3. பேதைமை.

மடம்—மடவன்=அறிவிலான். "மடவர் மெல்லியர் செல்லினும்' (புறம். 106).

மடவள்=அறிவிலாள். "மடவ ளம்மநீ யினிக்கொண் டோளே" (ஐங்குறு. 67).

மடவாள்=பெண். "குழன் மடவாள் கூறுடையாளொரு பாகம்" (திருவாச. 5 : 17).

மடவி=பெண். "மடவியரைச் சிந்தை விருப்பரு செய்வித்தல்" (கொக்கோ. பாயி. 12).

மடம்—மடந்தை=1. பெண். "இடைக்குல மடந்தை" (சிலப். 16 : 2). 2. பதினுன்கு முதல் பத்தொன்பது அகவை வரைப்பட்ட பெண். (பிங்.).

தெ. மடத்தி, க. மடதி.

மடம்வரல்—மடவரல்=1. மடப்பம். 'மடவர லுண்கண் வாணுதல் விறலி" (புறம். 89). 2. பெண். "மடவரனேக்கம்" (குறள். 1085).

மடமை—மடைமை = அறியாமை.

மடையன் = அறிவிலி.

மழ—மக = 1. இளமை. (யாழ். அக.). 2. பிள்ளை. "மந்திம்மக" (சீவக. 1897). 3. மகன் அல்லது மகள். "மக முறை தடுப்ப." (மலைபடு : 185).

க. மக. (g).

மழவு—மகவு = 1. குழந்தை. "மகவுமுலை வருட" (கம்பரா. தைல. 13). 2. மகன். 'கொண்டதோர் மகவினை' (அரிச். பு. மயான. 20). 3. மரத்தில் வாழும் விலங்கின் குட்டி.

"கோடுவாழ் குரங்கும் குட்டி கூறுப." (தொல். மர. 13).

"மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பும்
அவையும் அன்ன அப்பா லான" (ஷை ஷை 14).

க. மகவு (g).

மக—மகன் = 1. குழந்தை. (W.). 2. ஆண்பிள்ளை. "செய்ந்நன்றி கொன்ற மகற்கு" (குறள். 110). 3. புதல்வன். "மகன்தா யுயர்பும்" (தொல். கற். 3.). 4. சிறந்தோன். "நூல் கற்ற மகன்றுணையா நல்ல கொளல்" (நாலடி. 136). 5. போர் மறவன். "வேந்தன் மனம்போல வந்த மகன்" (பு. வெ 2:5). 6. கணவன். "நினக்கிவன் மகனாத் தோன்றியதூஉம்" (மணி. 21 : 29). 7. விளையாடும் பருவத்துப் பெண் பெயரீறு. "பெண்மை யடுத்த மகனென் கிளவியும்" (தொல். பெய. 11).

"புறத்துப் போய் விளையாடும் பேதைப் பருவத்துப் பெண் மகளை, மாரேக்கத்தார் இக் காலத்தும் பெண்மகனென்று வழங்குப." (சேனா. உரை).

மாரேக்கம் என்பது கொற்கை சூழ்ந்த நாடு.

க. மகம் (g).

ஒ. நோ: *Mac* (mak). A Gaelic word signifying son, and prefixed to many surnames, as *Mac Donald*, *Mac Grigor*, & c. It is synonymous with *Son* in tentonic origin......and with *Mab* or *Map* (shortened into *Ab* or *Ap*) in Webh names. It is allied to Coth. *magus*, a son fen, *magaths* (G. *magd*, *a* maid).

—The Imperial Dictionary of the English Language.

மக—மகள் = 1. பெண். "ஆயமகணீ யாயின்" (கலித். 107). 2. புதல்வி. "தல்கூர்ந்தாள் செல்வ மகள்" (கலித். 56).

3. மனைவி. "மனக்கினியார்க்கு நீ மகளாயதூஉம்" (மணி. 21: 30). 4. பெண் தெய்வம். எ-டு: திருமகள். 5. தெய்வத்தாய். எ-டு: நிலமகள்.

ம. மகள், க. மகள் (ள).

மகள்—மகடு=1. பெண். 2. மனைவி. (அரு. நி.)

மகடு—மகடூஉ=1. பெண். "எஃகான் ஒற்றே மகடூஉ அறிசொல்" (தொல். கிளவி. 6). 2. மனைவி. "இற்பொலி மகடூஉப் போல" (புறம். 331).

ஒ. நோ: வ. மஹிலா=பெண்டு, பெண்.
மஹிலா=பெண்டு.
மஹேலா=பெண்டு.
மஹேலிகா=பெண்டு.

மகளிர் மன்றம் மஹில சங்க எனப்படுகின்றது.

மகள் என்னும் சொல்லே மஹில என்று திரிந்திருத்தல் வேண்டும். மஹிலா என்னும் சொல்லிற்குக் காட்டப்படும் மூலம் மஹ் என்பதே. அம் மூலத்திற்கு மகிழ் அல்லது மிகு என்பது பொருளாகக் கூறப்படுகின்றது. அதுவே பொருளாயின், அதுவும் மஹிலா என்பது தமிழ்ச் சொற்றிரிபென்பதற்குச் சான்றுதல் காண்க.

மகார்=1. புதல்வர். "அவுணர்கோன் மகார்" (கந்தபு. மூவாயிர. 59). 2. சிறுபிள்ளைகள். "இளந்துணை மகாரின்" (பதிற்றுப். 71 : 7).

மகன்—மான் (ஆண்பாற் பெயரீறு)

எ-டு: திருமகன்—திருமான், கருமகன்—கருமான், பெருமகன்—பெருமான், மருமகன்—மருமான், சேரமான், வெளிமான்.

மகள்—மாள் (பெண்பாற் பெயரீறு)

எ-டு: பெருமகள்—பெருமாள்—பெருமா (கொச்சை); வேண்மாள்.

மகர்—மார் (பலர்பாற் பெயரீறு)

எ-டு: அண்ணன்மார், ஆசிரியன்மார்.

மழலை—மதலை=1. குழந்தை. 2. மகன். (பிங்.). "மதலை விற்றமை கேட்டலும்" (சேதுபு. அக்கினி. 82).

மதலைக் கிளி=இளங்கிளி. "மதலைக் கிளியின் மழலைப் பாடலும்" (பெருங். உஞ்சைக். 48 : 154).

முன்—முரு—முருகு=1. இளமை. (திவா.). 2. அழகு. (பிங்.). 3 குறிஞ்சிநிலத் தெய்வமாகிய முருகன். "அருங்கடி வேலன் முருகொடு வளைஇ" (மதுரைக். 611). 4. தெய்வம். "முருகு மெய்ப்பட்ட புலைத்திபோல" (புறம். 259). 5. வேலன் வெறியாட்டு. "முருகயர்ந்து வந்த முதுவாய் வேலன்" (குறுந். 362). 6. திருவிழா. (திவா.). "முருகயர் பாணியும்" (சூளா. நாட். 7). 7. படையல் விருந்து. "படையோர்க்கு முருகயர" (மதுரைக். 38). 8. திருமுருகாற்றுப் படை. "முருகு பொருநாறு" (தனிப்பா.).

முருகு—முருகன்=1. கட்டிளைஞன். (திவா.). 2. குமரன் என்னும் குறிஞ்சிநிலத் தெய்வம். 3. வெறியாடும் வேலன். "முதியாளோடு முருகனை முறையிற் கூவி" (கந்தபு. வள்ளி. 155). 4. பாலைநிலத் தலைவன. (அரு. நி.).

குறிஞ்சிநிலத் தேவனை இளைஞனென்று கருதியே, குறிஞ்சிநில மக்கள் முருகன் என்றனர்.

ஒ. நோ: குமரன்=இளைஞன், முருகன். ம. முருகன், க. முருக (g).

முரு—முறு—முறி=1. தளிர். "முறிமேனி" (குறள். 1113). 2. கொழுந்திலை. "இலையே முறியே தளிரே தோடே" (தொல். மர. 88). 3. இலை (யாழ். அக.).

முறிதல்=துளிர்த்தல். "முறிந்த கோல முகிழ்முலையார்" (சீவக. 2358).

முறி—மறி=1. குதிரைமான் முதலிய விலங்கின் இளமை.

"பார்ப்பும் பறழும் குட்டியும் குருளையும்
கன்றும் பிள்ளையும் மகவும் மறியுமென்
றொன்பதும் குழவியோ டிளமைப் பெயரே"
(தொல். மர. 1)

"யாடும் குதிரையும் நவ்வியும் உழையும்
ஓடும் புல்வாய் உளப்பட மறியே" (டி டி 12)

2. அழுங்கின் குட்டி. (பிங்.). 3. மான்குட்டி. "மறிகொள் கையன்" (தேவா. 980 : 10). 4. செம்மறியாடு. "மறியுடை யாயர் மாதர்" (கம்பரா. ஆற்று. 15). 5. மேழ ஓரை. (சூடா.). 6. ஆடு குதிரை கழுதை முதலியவற்றின் இளம்பெட்டை, பெண்விலங்கு.

ஒ. நோ: நாகு=இளமை, சில விலங்கின் பெட்டை.

ம., க., து. மரி.

மன்—மாண்—மாணி=1. இளமை. 2. அழகு. "மாணிக் குறளுருவாய மாயன்" (திவ். பெரியாழ். 5 : 2 : 5. அரும்.) 3. பள்ளிச் சிறுவன் "கருமாணியா யிரந்த கள்வனே" (திவ். இயற். 2 : 61). 3. குறள்வடிவம்.

மன்—மாண்=1. பள்ளிச் சிறுவன். "மாணுகி வைய மளந்ததுவும்" (திவ். பெரியதி. 8 : 10 : 8). 2. குறள் வடிவம், குறளன். "குறுமா ணுருவன் தற்குறியாகக் கொண்டாடும்" (தேவா. 164 : 5).

மாண்மகன்=பள்ளிச் சிறுவன். "பண்டு மாண் மகன்றன் செயல் பார்த்தவோ" (தக்கயாகப். 672).

மாண்—மாணவன்=1. பள்ளிச் சிறுவன். "மஞ்சனைக் குறுகியொரு மாணவப் படிவமொடு" (உத்தரரா. அனுமப். 6).

மாணவன்—வ. மாணவ.

மாணவன்—மாணவகன்=1. மாணி, மணமாகா இளைஞன் "பொச்ச மொழுகு மாணவகன்" (பெரியபு. சண்டேசுர. 40). 2. பள்ளிச் சிறுவன், ஓலைக் கணக்கன், மழபுலவன். "ஆசான் முன்னே துயில் மாணவகரை" (திருமந். 2163). 3. எட்டுமுதல் பத்தாண்டிற்குட்பட்ட சிறுவன். (யாழ். அக.).

மாணவன்—வ. மாணவக.

மாணவகன்—மாணுக்கன்=கற்போன், பள்ளிச் சிறுவன். "இவனே யிளமாணுக்கன்" (குறுந். 33).

---

## கலைச் சொற்கரு

அரிதின் முயன்று அமைக்க வேண்டிய கலைச்சொற்கள், மிக எளிமையாய்ப் புலமையோர் வாக்குகளில் பொதிந்து கிடக்கின்றன. அவற்றைத் தேடித் தொகுத்துப் பயன் படுத்துதல் கலைச் சொல்லாக்கத்திற்குப் பெருந்துணையாம்.

நீரில் வாழும் உயிர்களை 'நீரில் வாழ்வன' 'நீர் வாழ்வன' 'நீர் வாழ் உயிர்கள்' 'நீர் வாழ் உயிரிகள்' என்றெல்லாம் வழங்கும் வழக்குகள் உள்ளன. ஆனால் பட்டினத்தடிகள் அச் சொல்லை மிக அருமையும் எளிமையும் அமைய 'நீரி' என்கிறார்.

"நீரியாய்க் கிடமாய்க் கெட்டநாள் போதாதோ
நீரியாய் ஊர்வனவாய் நின்றநாள் போதாதோ?"

'நீரி' என்னும் சொல் என்ன சொல்கின்றது? ஊர்வன வற்றை 'ஊரி' என்று சொல்லலாம் என ஏவுகின்றது. 'நீரியாய் ஊரியாய் நின்ற நாள் போதாதோ!' என்று அடிகள் பாடி யிருக்கலாமே என்றால், 'நீரியாய்' என்பதிலுள்ள எதுகை யல்லவோ, 'நீரியாய்' என்னும் கலைச்சொல்லைப் படைத்துத் தந்தது.

(இ. கு.)

# ஆட்சிமொழித் துணுக்குகள்

[கீ. இராமலிங்கனர், எம். ஏ.
உறுப்பினர், ஆட்சிமொழிக்குழு, தமிழக அரசு]

Vice, Deputy இவ்விரு சொற்களுக்கும் தமிழில், 'துணை' என்னும் ஒரே சொல்லை வழங்குவது வழக்கமாகிவிட்டது.

Vice Chairman துணைத்தலைவர்
Deputy Chairman துணைத்தலைவர்

ஆனால் Viceக்கும் Deputyக்கும் பொருளில் வேறுபாடு உண்டு. Vice என்பது ஒருவருக்குப் 'பதிலாக' 'மாற்றாக' இருக்கும் ஒருவரைக் குறிக்கும்.

'பதில்' உருதுச்சொல் 'மாற்று' தமிழ்ச்சொல்.

Murugan Assistant is granted quarantine leave for 21 days. Malavan is appointed to act as Assistant vice Murugan.

உதவியர், முருகனுக்கு 21 நாள் தொற்றுத்தடுப்பு விடுப்பு அளிக்கலாகிறது. முருகனுக்கு 'மாற்றாக' மாலவனை, உதவியராக வேலைபார்க்க, அமர்த்தலாகிறது.

முருகன் விடுப்பிலிருந்து திரும்பி வந்துவிட்டால், மாலவனுக்கு வேலை இராது என்பது கருத்து.

Vice Chairman......என்பவர் Chairman........இருக்கும் போது செயலற்று இருப்பார். இருக்கவேண்டும். Chairman ...தலைமையமர்ந்து நடத்தவேண்டிய கூட்டத்திற்கு Chairman வராதபோது Vice Chairman.......தாமாகவே தலைமையமர்வார். அவரைத் தலைமையமரும்படி ஒருவர் முன்மொழியவும், ஒருவர் கருத்து மொழியவும் தேவையில்லை. விதிகள் அப்படி அமைந்திருக்கின்றன.

Vice Chairman தலைமையேற்று நடத்திவரும் கூட்டத்திற்கு Chairman.......வந்துவிட்டால் தாமாகவே Vice Chairman ......விலகிக்கொள்ளவேண்டும். Chairman முன்னிலையில் ஞாயிற்றின்முன் நிலாவைப்போல, Vice Chairman...தாமாகவே அதிகாரம் அகன்று நிற்பார். Chairman க்கு மாற்றாக அவர் இல்லாதபோது, அதிகாரம் செலுத்த விதிக்கப்பெற்றவரே Vice Chairman.

எனவே, அவரை மாற்றுத் தலைவர் என்பதே பொருத்தம். ஓசை நயத்துக்காக, 'மாற்றுத் தலைவர்' என்பதை, 'மாற்றுந் தலைவர்' எனலாம். மேலும் 'மாற்றுத் தலைவர்' என்பது. வேறு பொருளைத் தந்துவிடாமல் இருப்பதற்காகவும், 'மாற்றுந் தலைவர்' என்று சொல்வது தேவையாகிறது. தாய் இல்லாதபோது தந்தை மறுமணம் செய்துகொண்டவள் குழந்தைக்கு மாற்றுத்தாய் ஆகிறாள். அவளை 'மாற்றுந்தாய்' என்று

சொல்வதை நாம் அறிவோம். குழந்தையிடத்தில் அவன் நடந்துகொள்ளும் அன்பற்ற முறையைப் பெரும்பாலான மாற்றுத் தாயிடத்தில் காண்பதால் 'மாற்றுந்தாய்' என்பது, பொருளில் இழிந்து காணப்படுவதைக்கொண்டு 'மாற்றுந் தலைவர்' என்று சொல்லும்போது அந்த இழிந்த பொருளை அத் தொடருக்கும் கொள்ளக்கூடாது.

Vice Chairman க்கு Chairman தம்முடைய அதிகாரங்களில் சிலவற்றை ஒப்படை (Delegate) செய்யலாம். அப்போதும் Chairman க்கு மாற்றாகவே அவ் அதிகாரங்களை அவர் செலுத்துவார். இந்திய ஆட்சிக்கு Vice President ஆக இருப்பவருக்குச் சட்டத்திலேயே, மாநிலங்கள் மன்றத் (Rajya sabah) தலைவராக இருக்கும் அதிகாரம் தரப்பெற்றிருக்கிறது. இவ்வாறு, சட்டங்கள், விதிகளிலேயே சில அதிகாரங்களை Vice ஆக இருப்பவருக்கு ஒதுக்கினாலும் அவருக்கு மாற்றுந் தலைவர் என்னும் பெயரே பொருத்தமானதாகும். Vice Chanceller க்கு Chanceller அதிகாரங்கள் பெரும்பாலானவை அளிக்கப் பெற்றிருப்பதையறிவோம். அவரும், இயல்பாக, மாற்றும் வேந்தர், எனவே அழைக்கப்பெற வேண்டும்.

ஆனால், Vice Chairman, Vice President, Vice Chanceller ...இத்தொடர்களில் வரும் Vice க்குத் 'துணை' என்றே பொருள் கொண்டு வருகிறோம். மரபாகத் 'துணை' என்னும் சொல்லையே பயன்படுத்தி வருவதில் தவறில்லை. என்றாலும் 'Vice' க்கும் 'Deputy' க்கும் இருக்கும் வேறுபாட்டை நாம் மனத்திற்கொள்ள வேண்டும் என்பதற்காக இங்கே இவ் விளக்கம் தரப்பெற்றது. மேலும் அயல் மொழியாளர் ஒருவர் Vice க்கும் Deputy க்கும் தமிழில் தனித்தனிச் சொற்கள் இல்லை போலும் என்று குறையாக எண்ணிக்கொள்ளக் கூடாதே என்பதும் இவ் விளக்கம் தருவதன் ஒரு கருத்தாகும்.

இதேபோல், முன்மாத 'ஆட்சிமொழித் துணுக்குகள்' என்னும் தலைப்பில் Additional க்கும் Joint க்கும் முறையே 'இணை' 'பிணை' என்று சொல்வதிலுள்ள வேறுபாட்டை உணர்வதற்காகவே விளக்கம் தேவையில்லை. சிலர், Joint க்கே 'இணை' என்னும் சொல்லைப் பயன்படுத்துகின்றனர். அதன் பொருத்தமின்மை அங்கு எடுத்துச் சொல்லப் பெற்றது. என்றாலும் 'இணை'க்குக் 'கூடுதல்' என்னும் சொல்லையும் 'பிணை'க்குக் 'கூட்டு' என்னுஞ் சொல்லையும் பயன்படுத்துவதை, அந்த விளக்கம் தவிர்க்கவில்லை. 'இணை' 'பிணை'யைக் காட்டிலும் 'கூடுதல்' 'கூட்டு' எளிதில் பொருளாகும் சொற்களே.

———

# “கன்னடத்தில் கன்னித்தமிழ்”

[இரா. மதிவாணன்]

தேனினும் இனிய செந்தமிழ் தொன்மொழி. திசை தோறும் மருவி நிலைத்த தேய வழக்கே பிற தென்மொழிகள். தென்னக நான்மொழிகளுள் பழங்கன்னடம் பழந்தமிழுக்கும் பழுததமிழுக்கும் ஒரு பொற்பாலமாக விளங்குகிறது. பழங் கன்னட இலக்கியத் தொடர்கள் தமிழினின்றும் வேறுபடுத்தி யறிய முடியாதவை. மைசூர் தொல்பொருள் ஆய்வுத்துறை இயக்குநர், பர். எம். எச். கிருட்டிண அவர்கள், தம் நூலில்[1] ‘தக்கணப்பகுதி முழுவதிலும் வாழ்ந்த பழங்குடிகள் தமிழர்களே என்றும் கன்னடம், கருநாடகம் என்று பெயரிட்டவர்களும் தமிழர்களே என்றும் கூறுகிறார்.

“கன்னடம் வடுகு கலிங்கம் தெலிங்கம்
கொங்கணம் துளுவம் குடகம் குன்றம்
என்பன குடபால் இருபுற சையத்
துடனுறைபு பழகுந் தமிழ்திரி நிலங்களும்”

என்றார் அகத்தியனார் என்று நன்னூல் 161ஆம் நூற்பா வுரையில் மயிலைநாதர் குறிப்பிடுகிறார். இவர் கூற்றின்படி கன்னடத்தில் திரிந்தும் செஞ்சொற்களாகவும் உள்ள தமிழ்ச் சொற்களைக் காண்போம்.

### கன்னடம்—பெயர்க்கரணியம்:

கருநாடு—கரிசல்மண் நிலம் எனப் பொருள்படுவதாகப் பலரும் கருதுகின்றனர். பழந்தமிழ் நிலப்பாகுபாட்டில் குறிஞ்சி முதலாகிய நிலவகையாலல்லது மண்வகையால் பாகு பாடின்மையின் கல்+நாடு+அகம்=கல்நாடகம், கன்னடம் எனத் திரிந்ததாகக் கொள்வதே ஏற்புடைத்து. இன்றும் மலையாளமொழியில் கன்னடத்தைக் கன்னடகம் என்றும் மக்களைக் கன்னடிகர் என்றும் குறிப்பிடுவதைக் காணலாம்.

‘பெருங்கல் வைப்பின் நாடுகிழ வோயே’ ‘கல்லிறந் தோரே’ ‘கல்நாடன்’ என்னுந் தொடர்களில் ‘கல்’ மலையும் குன்றும் சார்ந்த நிலப்பகுதியைக் குறிக்கிறது. கல்நாடர் எனும் சொல் கன்னடர், கன்னடர் (கல்நாடர்) கர்நாடர்

---

1. கர்நாடக பூர்வ சரித்ரெ—(பக்—5) மைசூர் பல்கலைக்கழக வெளியீடு-என். 6.

என்று திரிவது இயல்பு. துளுமொழியில் கால்—காரு என்றும் தலை—தரெ என்றும் லகரம் ரகரமாகத் திரிகிறது. ஆந்திர மாநிலத்திலுள்ள ராயலசீமைப் பகுதியும் கல்நாடே. அறை—ருய்=கல் (தெ.) எனவே 'கர்நாடகம்' என்பதினும் கன்னடகம் என்பதே ஏற்புடைத்து எனத் தெரிகிறது. கரு+நாகம்—கன்னகம் ஆகாதவாறுபோல. கரு+நாடு+அகம்-கன்னடம் எனத் திரியாது. கல்+நாடு+அகம்—கன்னடகம்—கன்னடம் எனத் திரிவது இயல்பானது.

வீரசோழியத்தில் கன்னடர், பிராகிருதத்தில் கன்னட, மராத்தியில் கானட என்னும் வழக்குகள் ஒப்புநோக்கத்தக்கன. கன்னட இலக்கியத்திலும் கல்வெட்டுகளிலும் எங்கும் கருநாடர் என்னும் சொல் இல்லை.[1]

கருநாடகம் என்பது மகாராட்டிரம்

கோவிந்த பை[2] என்னும் அறிஞர் "மகாராட்டிரத்திற்குக் கருநாடகம் என்று பெயரிருந்தது. கருநாடு என்றால் பெரிய நாடு என்று பொருள். கன்னடத்தில் 'கருமாட' எனும்சொல் பெரிய மாளிகை (மாடம்) என்று பொருள்தரும்" என்கிறார். தாராதந்திரம் என்னும் நூலிலும் கர்னாடக், மகாராட்டிரத்தின் மற்றொரு பெயராகக் கூறப்பட்டுள்ளது. கலிங்கத்துப் பரணியில் கருநாடர், வடுகுந்தமிழும் குழறிப்பேசியதாக வுள்ளதேயன்றி, கன்னடம் பேசியதாக இல்லை. கன்னட மன்னன் புலிகேசி தன்னை மகாராட்டிர அரசன் (மகாராட்டிர ஒடய) எனக் குறித்துக்கொள்கிறான். எனவே கருநாடு என்பதன் வடமொழியாக்கமே மகாராட்டிரம் என்று தெரிகிறது.

இன்றைய கன்னடம் :

இன்றைய கன்னடம் புதுக்கன்னடம் எனப்படுகிறது. புதுக்கன்னடத்தில் குடியேற்றப் பாதுகாப்புச் சொற்களாகப் (colonial preservation) பல தமிழ்ச் சொற்கள் உள்ளன. சான்றாகப் பெங்களூர் செல்லும் அனைவர்காதிலும் படும் 'கொத்தில்ல' என்னும் சொல்லைக் காட்டலாம். தனக்குத் தெரியாது என்பதைக் கன்னடியர் 'நனகெ கொத்தில்ல' என்றும், எனக்குத் தெரியும் — தெளிவாயிற்று — என்பதை 'நனகெ கொத்தாய்த்து' என்றும் கூறுவர். இச் சொல்லை முதலில் கேட்கும்போது இது நமக்குத் தமிழ்ச் சொல்லாகவே தோன்றுவதில்லை.

---

1. கன்னட பாஷெய சரித்ரெ. பக்-20.
கன்னடரவ-தசரா. 1938.

இது, கொளுத்து+இல்லை என்னும் தமிழ்த் தொடரே என்று அறியும்போது உவகை மேலிடுகிறது. 'உனக்கு அறிவு கொளுத்துவேன்', மடமாவது, கொளுத்தக் கொண்டு கொண்டது விடாமை, என்னும் தொடர்களில் 'கொளுத்தல்' என்னும் சொல் விளங்குதல், புரிந்துகொள்ளுதல் எனப் பொருள்படுதலைக் காணலாம். கொளுத்தல் எனும் சொல் 'EnligntEn' எனும் ஆங்கிலச் சொல்லுக்கு நிகராயது.

கன்னடத்தில் உளுந்து—உத்து எனவும் மருந்து—மத்து எனவும் திரியும். அதன்படி கொளுத்து—கெத்து என முதலயல் எழுத்து கெட்டது. இதனை, மொழி நூலார் அடிச் சொல் மெய் கெடல் (Rejection of radical consonants) என்பர்.

கன்னட மாநிலத்து இடப்பெயர்களும் பண்டு தூய தமிழ்ப் பெயர்களே. கீழ்க்கண்டவை சில சான்றுகள் :

ஜோக் நீர்வீழ்ச்சி — தோகைக்கா நீர்வீழ்ச்சி
கபினி ஆறு — கீழ்ப்பூவானி ஆறு
கோலார் — குவளாலபுரம்
பெல்காம் — வேளகம்
மைசூர் — எருமையூர்
துவாரசமுத்திரம் — துவரைநகர் (இருங்கோவேள் மரபினரின் தலைநகரம்).

கன்னடமொழியில் வடசொற்களைத் தேவையின்றி மிகுதியாகக் கலப்பதை நயசேனர், நாகவர்மர் முதலிய புலவர்கள் அன்று தொட்டே எதிர்த்தனர். வடசொற்கலப்பு தூய நெய்யில் எண்ணெய் கலப்பதைப் போன்றது என்றனர். அண்டய்யன் என்னும் புலவர் இயற்றிய 'கப்பிகராகாவம்' என்னும் பனுவல் அச்ச கன்னடத்தில் அமைந்ததாகும். எனினும் இன்றைய கன்னடத்தில் வடசொற்கலப்பு மிகுந்துள்ளது. இத்தகு சூழலிலும் கன்னட மொழியில் கன்னித் தமிழ்ச் சொற்கள் என்றும் மாறா இளமைப் பொலிவோடு ஆங்காங்கு பளிச்சிடுகின்றன என்பதைக் கீழ்க்கண்ட சொற்கள் வலியுறுத்துகின்றன.

மன்னணெ (மன்னணை) — நன்கு மதித்துப்போற்றுதல் —கௌரவித்தல்
கொள் கொடை — கொடுக்கல் வாங்கல்
காரு திங்கள் — மழை மாதங்கள்
தேர்கடெ (தேர்கடை) — தேர்ச்சி

விடுகடெ (விடுகடை) — விடுதலை
முன்னடெ (முன்னடை)— முன்னேற்றம்
ஓதுகர் — ஓதாளர் (வாசகர்)
முத்திதி — முற்றிழை (மங்கலமகள்—
சுமங்கலி)

இச்சொற்களை நாமும் ஆளுவதில் தவறில்லை. வாசகர் வட்டம் என்பதை ஓதாளர் வட்டம், ஓதுநர் வட்டம் என்றும், சுமங்கலி என்பதை முற்றிழை என்றும் கொடுக்கல் வாங்கலைக் கொள் கொடை என்றும் வழங்கலாம். மன்னணை என்பதைப் பெயராகவும் வினையாகவும் மன்னனைப்போன்று நன்குமதித்து ஒருவரைப் பாராட்டும் (கௌரவித்தல்) போது வழங்கலாம். இவை நம் தமிழ்ச் சொற்களே. மன்னாணை (மன்+ஆணை) என்னும் சொல் நிலைபெற்று ஒப்பாணை (recognition order) என்று பொருள் படுவதாகும்.

பழங்கன்னடத்தின் இயல்பைத் தெளிவாகக் காட்டும் 'சப்தமணி தருப்பணம்' என்னும் இலக்கண நூல் கன்னடத் தொல்காப்பியம் எனப்படுவதாகும். வரும் கட்டுரைகளில் பழங்கன்னடத்துக்கும் தமிழுக்கும் உள்ள ஒற்றுமைகளைக் காண்போம்.

———

## கலைச் சொற்கரு

*சில புலவர்கள் பாடிய பாடல்களைத் தொகுக்கின்றோம். அதனைத் 'தொகுப்பு' என்றும் 'திரட்டு' என்றும் வழங்குகின்றோம். அவ்வாறே சிலர் பாடிய பாடல்களில் இருந்தோ, சில நூல்களில் இருந்தோ ஒரு நோக்கம் கொண்டு தேர்ந்தெடுத்துத் தொகுக்கின்றோம். அதனையும் 'தொகுப்பு' 'திரட்டு' 'தொகை' என்பன போலவே வழங்குகின்றோம். இரண்டற்கும் வேறுபாடு காட்டற்கு ஏற்ற சொற்கள் வேண்டும் அல்லவா!*

*கிடைப்பவற்றை ஓர் ஒழுங்குபடத் தொகுத்து வைப்பதைத் தொகுப்பு, தொகை, திரட்டு என்னும் பெயர்களால் வழங்கலாம், தேர்ந்து தொகுப்பதற்கு வேறொரு பெயர் காணல் இன்றியமையாதது.*

*டாக்டர் உ. வே. சா. அவர்கள் சிந்தாமணிப் பதிப்பை மேற்கொண்டனர். அதற்குத் திருநெல்வேலி அம்பலவாண கவிராயர் அவர்கள் வீட்டில் இருந்து ஓர் ஏட்டுப்படி கிடைத்தது. அது, சிந்தாமணியில் தேர்ந்தெடுக்கப் பெற்ற பாடல்களைக் கொண்டது. ஆதலால் அதற்குச் 'சிந்தாமணித் தெரிவு' எனப் பெயர் சூட்டப் பெற்றிருந்தது. ஆதலால் 'தெரிவு' என்பதைத் தேர்ந்தெடுக்கப் பெற்ற தொகுப்புக்குப் பயன்படுத்தலாம் அல்லவா!* — (இ. கு.)

# இலக்கிய வகைமை - ஒரு வேண்டுகோள்

[புலவர் இரா. இளங்குமரன்]

"தொண்ணூற்றுறுவகைச் சிறு நூல்கள்" என்னும் கருத்து, தமிழ் இலக்கிய உலகில் பெரிதும் வழங்கப் பெறுகின்றது; அகர வரிசை நூல்களும் குறிப்பிடுகின்றன. ஆனால் பாட்டியல் நூல்களைப் பயின்றபோதும், சிற்றிலக்கிய நூல்களைக் கற்றபோதும் "தொண்ணூற்றுறுவகைச் சிற்றிலக்கியங்கள் தாமா உள்ளன?" என்னும் ஐயம் எனக்குக் கிளர்ந்து கொண்டே இருந்தது. அதன் விளைவே 'இலக்கிய வகைமை' என்பதொரு நூலாக உருக் கொண்டது.

பல்வேறு பாட்டியல் நூல்களையும் ஆராய்ந்ததில் சில செய்திகள் புலனாயின. (க) பாட்டியல்கள் 96 வகைச் சிறு நூல்கள் என்னும் ஒரே வரம்புகொண்டு சொல்வன அல்ல. (உ) அவை கூறும் சிறு நூல்களின் வரிசை முறையும் ஒப்பானவை அல்ல. (ங) எல்லாப் பாட்டியல்களுக்கும் பொதுவான சிறு நூல்கள், தனித்தனியே சிறப்பான சிறுநூல்கள் என இரு வகைப் பாகுபாடுகள் கொள்ளக் கிடக்கின்றன. பொது நூல்கள் நாடு தழுவியவை என்றும், சறப்பு நூல்கள் வட்டாரமும் வழக்கும் தழுவியவை என்றும் அறியப் பெறுகின்றன. (ச) பாட்டியல் கூறும் சிறு நூல்களையெல்லாம் அடைவு செய்யப் பெறின் 96 வகைக்கும் மிகுகின்றன. (ரு) பொது வழக்கான சிறு நூல்களை மட்டுமே கூறியமையும் பாட்டியல் நூல்களும் உண்டு; என்பவை அவை.

யான் தொகுத்து வைத்துள்ள பாட்டியல் நூல்கள், சிற்றிலக்கிய நூல்கள், இலக்கிய வரலாறுகள், புலவர் வரலாறுகள் ஆகியவற்றைக் கொண்டு 163 வகைச் சிறு நூல்கள் உளவாதல் புலப்பட்டது. அப் புலப்பாட்டின் தூண்டலால் கழக ஆட்சியாளர் தாமரைச் செல்வர் திரு. வ சுப்பையாபிள்ளை அவர்களுக்கு என் சிற்றிலக்கிய ஆய்வை வெளியிட்டேன். அவர்கள் மிக உவப்புற்றனர். "மனிதர்காள் இங்கேவம் கனிதந்தால் கனி உண்ணவும் வல்லிரோ!" என அப்பரடிகள் கனிந்து அழைத்தாற்போல் அழைத்து நிற்கும் தவத்திரு. மறைமலையடிகளார் நூல் நிலையத்திலுள்ள அரிய நூல்களையெல்லாம் ஆராய வாய்ப்பு அளித்தனர். அப்பொழுது கழகப் பொதுமேலாளர் திரு. இரா.

கலியாணசுந்தரனுர் அவர்களும், நூலகர் திரு இரா. முத்துக்குமாரசாமி அவர்களும் உழுவலன்பால் உதவிய உதவிகள் பெரிதும் ஊக்கின. இவ்வராய்ச்சியால் அரிய சிற்றிலக்கிய வகைகள் பல கிடைத்தன. மேலும், கழக ஆட்சியாளர் அவர்கள் வழியால், திருவான்மியூர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் நூல்நிலையத் தொடர்பும், திருவாமாத்தூர் வண்ணச் சரபம் தண்டபாணி அடிகளார் திருமடத் தொடர்பும் வாய்த்தன. அவற்ருல் பெற்ற பயன் பெரிதாகும்.

தமிழ் செய்த தவத்தால் பிறந்த பெருமகனுர் டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள் ஆவர். அவர்கள் வெளிவிட்டுள்ள சுவடிப் படியாலும், அச்சில் வாராத 'பிரபந்தத் திரட்டு' 'பிரபந்த தீபம்' என்னும் நூல்களின் கைப்படிகளாலும் அறியவந்த சிற்றிலக்கிய நூல்கள் பலவாயின.

தண்டபாணி அடிகளாரின் திருப்பெயரனுர் முருகதாச அடிகளாரும், அவர்கள் திருமகனுர் புலவர் சங்கரலிங்கனுர் அவர்களும், தண்டபாணி அடிகளார் படைத்த சிற்றிலக்கியப் புதுப் படைப்புக்கள் பலவற்றைக் கனிவோடும் எழுதி உதவினர்; விளக்கங்களும் தந்தனர். இவ் வகையால் பெருக்கமுற்ற இலக்கிய வகைமை மேலும் பெருக்கமுற வாய்ப்பு உண்டு என்று கருதியே இவ் வேண்டுகோள் விடப்பெற்றதாம்.

''செல்வி'' ஆராய்ச்சி இதழ்; அறிவு வேட்கையர் அவாவும் இதழ்; பயில்வாரே அன்றி நூல் படைப்பாரும் போற்றும் இதழ். ஆகலின் செல்வி வட்டப் புலமையாளர்கள், இங்குக் காட்டப் பெறும் சிற்றிலக்கிய வகைகளை அன்றி வேறு சில வகைகளையும் ஆய்ந்து அறிந்திருத்தல் கூடும். அவற்றைக் குறிப்பிட்டு உதவுவார்களாயின் பெருநன்றியுடையேன். இதனைச் செந்தமிழ்ச் சிற்றிலக்கிய ஆராய்ச்சிக்குச் செய்யும் உதவியாகக் கருதி அறிவு நலங்கனிந்த அன்பர்கள் உதவுமாறு பணிவன்புடன் வேண்டிக் கொள்கிறேன். அடியிற்காணும் பட்டியில் 287 வகை நூல்களைக் காணலாம். கழகம் சிற்றிலக்கிய நூல்களைப் பேணிக் காக்கும் பொருட்டு அச்சிடுவதற்குத் திட்டம் ஒன்று வகுக்கின்றது.

**இலக்கிய வகைமை - அகரவரிசை**

அகலக்கவி
அகவல்
அங்கமாலை
அட்டகம் (எண்மணி)
அட்டமங்கலம்
அண்டகோசம்
அந்தாதி
அந்தாதித் தொகை
அம்மானை
அரசன் விருத்தம்
அரிபிறப்பு (உற்பவமாலை, தசப் பிராதுற்பவம்)
அலங்கார சட்கம்
அலங்கார பஞ்சகம்

அலங்காரம்
அவயவ அறிக்கை
அனுபூதி
அனுராகமாலை
ஆடாமணி
ஆண்கூடல்
ஆற்றுப்படை
ஆறெழுத் தலங்காரம்
இணைமணி மாலை
இதழ்குவிப்பா
இதழகல் அந்தாதி
(நிரோட்டகம்)
இயன்மொழி வாழ்த்து
இரட்டைச்சொல் யமகமாலை
இரட்டைமணிமாலை
இராசாங்கமாலை
இருபா இருபது
இல்லற வெள்ளை
இலகரி
இலட்சுமி விலாசம்
இன்னிசைத் தொகை
உத்தியாபனம்
உலா
உலாமடல்
உழத்திப் பாட்டு (பள்ளு)
உழிஞை மாலை
ஊசல்
ஊர்நேரிசை
ஊரின்னிசை
எச்சரிக்கை
எண்கூற்றிருக்கை
எண்சீர் எண்பது
எண் செய்யுள்
எழுகூற்றந்தாதி
எழுகூற்றிருக்கை
எழுபா எழுபது
எழுமணி
ஏகபாதத் தந்தாதி
ஏகாங்கிரி
ஏசல்
ஏர்மங்கலம் (முகவைப் பாட்டு)
ஏற்றப் பாட்டு
ஐந்திணைச் செய்யுள்
ஐம்படை விருத்தம்
ஒருதிணை மாலை
ஒருபது கூற்றிருக்கை
ஒருபா ஒருபது

ஒரு போகு
ஒருவருக்கப்பா
ஒலியந்தாதி (ஒலியலந்தாதி)
ஒன்பது கூற்றிருக்கை
ஓம்படை விருத்தம்
ஓரெழுத் தந்தாதி
கட்டியம்
கடாநிலை
கடிகை வெண்பா
கடைநிலை
கண்ணி
கண்படைநிலை
கணக்கு
கதை
கதைமொழி மாற்று
கப்பல் பாட்டு
கலம்பகம்
கலம்பகமாலை
கலியந்தாதி
கலியாணசுந்தரம்
கலிவெண்பா
களவு கண்ணி
கற்பனை விலாசம்
கன்னி மயக்கம்
கனகாபிடேகம்
காஞ்சிமாலை
காதல்
காப்பியம்
காப்புமாலை
காமரசமாலை
கானவேட்டம்
கிளிக்கண்ணி
குடைவிருத்தம்
குதிரை விருத்தம்
கும்மிப் பாட்டு
குலோதயமாலை
குவிபா ஒருபது
குழமகன்
குளுவ நாடகம்
குறத்திப் பாட்டு (குறம்)
குறியறி சிந்து
குறுந்தொகை
கூடல்மாலை
கேசாதிபாதம்
கைக்கிளைமாலை
கையறுநிலை
கோயில் ஒழுகு

கோல் விருத்தகம்
கோவை (அகப்பொருட் கோவை)
கோவைச் சதகம்
சகத்திராங்கி
சட்கம் (அறுமணி)
சடானனம்
சண்டை
சத்தகம் (எழுமணி)
சந்த சதகம்
சதகப் பதிகம்
சதகம்
சத சத்தகம்
சதுரங்கபந்தம்
சமசங்கிரமம்
சமுத்தி
சாதகம்
சித்திரகவி
சித்திர உபாயசெயம்
சிந்து
சிந்து மோகினி
சிலேடா சாகரம்
சிறுகாப்பியம்
சின்னப்பூ
சின்னமாலை
சீட்டுக்கவி
சுயம்வரம்
செந்தமிழ்மாலை
செருக்களவஞ்சி
செருக்கள வழி
செவியறிவுறூஉ
சேவல் பாட்டு
தசமணி மாலை
தசாவகக் கூற்றிருக்கை
தசாங்கத்தியல்
தசாங்கம்
தடாக சிங்காரம்
தண்டக மாலை
தமிழ்சொரி சிந்தாமணி
தரும விசேடம்
தனசிங்காரம்
தாண்டகம்
தாமரை நோன்பு
தாரகை மாலை
தாலாட்டு
தாழிசைமாலை
தானைமாலை
திக்குவிசயம்
திரிபந்தாதி
திருச்சின்னம்
திருப்பெயர்ப் பொறி
திருமேனி சிவப்பு
திருமேனி வெளுப்பு
திருவாயிரம்
தீபம் (விளக்கு)
தும்பிப் பாட்டு
துர்பைமாலை
துயிலெடைநிலை
துனி விசித்திரம்
தூது
தெய்வக்கையுறை
தேவாங்க வரையுள்
தொகை
தொகைநிலைச் செய்யுள்
தொகை வெண்பா
தொடர்நிலைச் செய்யுள்
நகர விருத்தம்
நட்சத்திர மாலை
நடுவொலியலந்தாதி
நதி விசேடம்
நயனப் பத்து
நவமணி
நவமணி மாலை
நவரச மஞ்சரி
நாட்டு விருத்தம்
நாம மாலை
நாமாவளி
நாழிகைக் கவி
நாற்பா மூவின்மாலை
நான்மணி மாலை
நாற்பது
நானிலைச் சதகம்
நூற்றந்தாதி
நெடுந்தொகை
நொச்சிமாலை
நொண்டி நாடகம்
பஞ்சகம்
பஞ்சரத்தினக் கோவை
பட்டாபிடேகம்
பண்ணை விசித்திரம்
பதம்
பதிகச் சதகம்
பதிக பஞ்சகம்
பதிக மண்டலம்
பதிக மணிமாலை

பதிகம்
பதிற்றந்தாதி
பதிற்றுப்பத்தந்தாதி
பயோதரப் பத்து
பரணி
பருவமாலை
பல்சந்தமாலை
பவனிக் காதல்
பள்ளி எழுச்சி
பறந்தலைச் சிறப்பு
பறைநிலை
பன்மணிமாலை
பன்னிரு பாமாலை
பாட்டு
பாடாண் பாட்டு
பாதாதி கேசம்
பாதி
பாவைப் பாட்டு
பிரிவு சுரம்
பிள்ளைத் தமிழ்
புகழ்ச்சி மாலை
புராணம்
புலம்பல்
புறநாட்டுச் செய்கை
புறநிலை வாழ்த்து
பூவைநிலை
பெயர் நேரிசை
பெயரின்னிசை
பெருமகிழ்ச்சி மாலை
பெருமங்கலம்
பொய்ம்மொழி அலங்காரம்
பொருள் வஞ்சி
போர்கெழு வஞ்சி
மகுட ஆசிரியப் பதிகம்
மங்கல வள்ளை
மஞ்சரி
மடல்
மணிமாலை
மதன சிங்காரம்
மதன விசயம்
மயில் பாட்டு
மருட்பாச் செய்யுள்
மறக்கள வஞ்சி
மறம்
மாதிரக்கட்டு
மாலை
மாலை மாற்று
மானதவம்
முதுகாஞ்சி
மும்மண்டில வெண்பா
மும்மணிக் கோவை
மும்மணி மாலை
முரண் வஞ்சி
மெய்க்கீர்த்தி மாலை
மொழிநெறி எழுபா
யானைத் தொழில்
(வாதோரண மஞ்சரி)
வகுப்பு
வச்சிராங்கி
வசந்த மாலை
வசவசம்ப்ரதம்
வஞ்சிமாலை
வண்ணம்
வண்ண விருத்தம்
வதன சந்திரோதயம்
வரலாற்று வஞ்சி
வருக்கக் குறள்
வருக்கக் கோவை
வருக்கச் சந்தவெண்பா
வருக்கமாலை
வளமடல்
வாகனக்கவி
வாகைமாலை
வாடாதமாலை
வாயுறை வாழ்த்து
விசயம்
விசய வித்தாரம்
விடய சந்திரோதயம்
விடுகவி
விருத்தம்
வில்லுப்பாட்டு
விளக்குநிலை
விற்பனம்
வீரவெட்சி மாலை
வெற்றிக் கரந்தை
வேடர் விநோதம்
வேந்தன் குடைமங்கலம்
வேனில்மாலை.

———

# 'நரம்பு மருத்துவம்' (Neurology) நூல் வெளியீட்டு விழா

4-1-1976 இல் சென்னை மருத்துவக் கல்லூரி மருந்தியல் துறை சொற்பொழிவுக் கூடத்தில், சென்னை மருத்துவக் கல்லூரி முதல்வர் பேராசிரியர் டாக்டர் ம. நடராசன் அவர்கள் தலைமையில், கழக வெளியீடான 'நரம்பு மருத்துவம்' என்னும் நூல் வெளியீட்டு விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது.

வரவேற்புரை:

கழக ஆட்சிப் பொறுப்பாளர், தாமரைத்திரு. வ. சுப்பையா அவர்கள் அனைவரையும் வரவேற்றுப் பேசுகையில், "எப்படிச் சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் என்ற பெயருடைய ஒரு கழகம் மருத்துவத்துறை நூல்களை வெளியிட முன்வந்தது என்ற ஐயம் சிலருக்கு எழுவதுண்டு. இந்தக் கழகம் தமிழுக்கும் சைவத்திற்கும், தமிழ்க் கலைகளுக்கும் தொண்டு செய்வதற்கென்றே 1920 செப்டம்பர்த் திங்களிலே நிறுவப்பெற்றது. இந்தியாவிலேயே நூல் பதிப்பிற்கென்று முதன் முதல் நிறுவப்பெற்ற கூட்டுப்பங்கு நிறுவனம் (Public Company) இஃது ஒன்றே என்றால் நீங்கள் எல்லாரும் பெருமைப் படுவீர்கள்.

"இந்தக் கழகம், நூல் விற்பனையில் கிடைக்கும் ஊதியத்தில் நேர்பேர் பாதித்தொகையை அறத்திற்கெனவே ஒதுக்கி மூன்று நூல் நிலையங்களை நடத்தி வருகிறது. தமிழ் — தமிழ் நாடு — தமிழினம் ஆகியவற்றின் நன்மைக்காகவே கடந்த 50 ஆண்டுகளாக, 'செந்தமிழ்ச் செல்வி' என்ற திங்கள் இதழை நடத்தி வருகின்றது.

'மேலும், இதுகாறும் பல துறைகளில் 1595 நூல்களை வெளியிட்ட ஒரு பதிப்பகம் இந்தியாவிலேயே இல்லை. தமிழ் இலக்கண இலக்கியங்கள் அனைத்தையும் உரையுடன் வெளியிட்டிருக்கிறது. மாணவர்களுக்கு உணர்வூட்டும் வகையில் ஏறத்தாழ ஆயிரம் புத்தகங்களுக்குமேல் வெளியிட்டிருக்கிறது. திருநெல்வேலியில் 'குமர குருபரர் குழந்தைப் பள்ளி' என்ற பெயரில் குழந்தைப் பள்ளி ஒன்றினையும், திருவள்ளுவர் புலவர் கல்லூரி ஒன்றினையும் நடத்தி வருகிறது.

1940 முதல் கழகம் செய்துவரும் முயற்சியினால்தான் இன்றைய ஆட்சி தமிழிலே நடைபெற்று வருகிறது என்று சொன்னால் அது மிகையன்று.

"ஆட்சித் துறைத் தமிழ், தமிழ் ஆட்சிச் சொல் அகர வரிசை, தமிழைப் பிழை நீக்கி எழுதுமுறை, திரு. அப்பாத்துரையார் தொகுத்த ஆங்கிலம் தமிழ் அகராதி என இந்த நான்கு நூல்களையும் எல்லா அரசு அலுவலகங்களும் வாங்கிப் பயன்

## ‘நரம்பு மருத்துவம்’ வெளியீட்டுவிழா
## (4—1—1976)



நலத்துறை அமைச்சர் மாண்புமிகு க. அன்பழகன் அவர்கள்
நரம்பு மருத்துவநூலை டாக்டர் நாராயணன்
அவர்களிடம் வழங்குதல்



நூலாசிரியர் டாக்டர் லோகமுத்துக்கிருட்ணனுக்குப்
பொன்னாடை போர்த்துதல்

## நெல்லைக்குமரகுருபரர் குழந்தைப்பள்ளி 8-ஆவது ஆண்டுவிழா



பள்ளித்துணை ஆய்வாளர் உயர்திரு ரெஜினுஜேபஸ்
அவர்கள் தலைமையில்
திருவாட்டி ஆறுமுக லட்சுமி சூரியநாராயணன் அவர்கள்
பரிசு வழங்கிய விழா பக்கம் ௩0௨

## பேரா. லெ. ப. கரு. இரா. மணிவிழா



தமிழ்மாமணி லெ. ப. கரு. இராமநாதன் செட்டியாரவர்கட்கு
மணிவிழாவின்போது இராசா சர் முத்தையா செட்டியாரவர்கள்
பொன்னுடை போர்த்துதல் பக்கம் உகக

படுத்துகின்றன. மேலும் ஆட்சித்துறைக்காவலர் திரு. கீ. இராமலிங்கனார் எழுதிய நகராட்சி முறை நூலையும் வெளியிட்டிருக்கிறது. நீதிமன்றங்கள் தமிழிலேயே நடைபெற வேண்டும் என்பதற்காகத் திரு மா. சண்முக சுப்பிரமணியம் அவர்கள் எழுதிய 'சட்ட இயல்', 'தீங்கியல் சட்டம்', 'சட்டத் தமிழ்' ஆகிய நூல்களையும், திரு. பு. ரா. பக்கிரிசங்கர் எழுதிய 'சட்ட மன்ற நடைமுறை' என்ற நூலையும் வெளியிட்டிருக்கிறது.

"அத்துடன் மருத்துவததுறை, பொறியியல் துறை ஆகிய அறிவியல் துறை நூல்கள் தமிழில் வெளிவரவேண்டும் என்பதற்காக 'வாய். பல் மருத்துவம்' 'கண் மருத்துவம்' என்னும் நூல்களை வெளியிட்டிருக்கிறது.

"இப்போது எனக்கு அன்புப் பெயரரான டாக்டர் லோகமுத்துக் கிருட்டிணன் அவர்கள் எழுதிய 'நரம்பு மருத்துவம்' என்ற நூலை வெளியிடுகின்றோம். இஃது அவர்கள் எழுதிய முதல் நூல். இதனை அவர்கள் மிக அழகாக எழுதியுள்ளார்கள். ஆயிரக் கணக்கான கணிப்பான்கள் சேர்ந்தாலும் மூளைக்கு ஈடாகாது என்ற கருத்தை அவர்களுடைய இந்த நூலிலே கண்டேன். அவர்கள் கல்லூரியில் படிக்கும்போதே பல பரிசுகளைப் பெற்றவர்கள். மருத்துவத் துறையிலும் மேல் நாட்டுப் பட்டங்களைப் பெற்றவர்கள்.

"தம்மின் தம்மக்கள் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது"

என்ற குறளைத்

"தம்மின் தம்பெயரர் அறிவுடைமை மாநிலத்து
மன்னுயிர்க் கெல்லாம் இனிது"

என்றும்,

"தந்தை மகற்காற்றும் நன்றி அவையத்து
முந்தி இருப்பச் செயல்"

என்ற குறளைப்,

"பாட்டனார் பெயரர்க்குச் செய்நன்றி பேரவையுள்
முந்தி இருப்பச் செயல்"

என்றும் மாற்றி அமைத்துப் பெருமை கொள்கின்றேன்."

தலைமை உரை:

சென்னை மருத்துவக் கல்லூரி முதல்வர் டாக்டர் ம. நடராசன் அவர்கள் ஆற்றிய தலைமை உரையில்,

"சென்னை மருத்துவக் கல்லூரியில் பணிபுரியும் ஓர் ஆசிரியர் தம்முடைய பல வேலைகளுக்கிடையே தமிழ்த் துறைக்கும் இவ்வளவு தூரம் வேலை செய்ய முன்வந்து அதன் விளைவாக 'நரம்பு மருத்துவம்' என்னும் இந்நூல் வெளியாகியிருப்பதை நினைத்து மிக்க மகிழ்ச்சியடைகிறேன்.

"இந்த விழாவில் சம்பந்தப்பட்டவர்கள் இரண்டு இளைஞர்கள். 80 வயதை அணுகிக் கொண்டிருக்கும் சுப்பையா என்பவர் ஓர் இளைஞர்; மற்றொருவர் நம் லோகமுத்துக் கிருட்டிணன். தமிழ்த் தாய்க்குத் தொண்டு செய்து வருவதனால் தான் திரு. சுப்பையா அவர்கள் என்றும் இளமையோடிருக் கிறார்கள்.

"எங்களுக்கெல்லாம் எழுதுவதற்கு ஆர்வம் இருக்கிறது. ஆனால் ஆற்றல் இல்லை. எனினும், இனி வாய்ப் பேச்சோடு இராமல் ஆர்வத்தைச் செயல் படுத்த வேண்டுமென்று நினைக் கிறேன், என்பதைத் திரு. சுப்பையா அவர்களுக்குத் தெரி வித்துக் கொள்ளுகிறேன். திரு. லோகமுத்துக் கிருட்டிணன் அவர்கள் எவ்வளவுதான் படித்திருந்தாலும் கிராமங்களுக்குச் சென்று சேவை செய்வதில் அக்கறை உடையவர் என்பதை நான் அறிவேன். அப்படிப்பட்ட அவர் தம்முடைய அனுபவங்களையெல்லாம் திரட்டி நூல்கள் எழுதினால், மேலும் பல நூல்கள் வெளிவரும் என்று நம்புகிறேன். அவர்களுக்கு என்னுடைய பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்" என்றார்.

பல் மருத்துவத்துறைப் பேராசிரியர் டாக்டர் கண்ணப்பர் அவர்கள் பேசுகையில்,

"இந் நாளில் இவ்விதமான அறிவியல் நூல்களை வெளி யிடுவதற்கான ஆர்வமும் ஊக்கமும் தர, ஒரு சிலர்தாம் உண்டு. என்னுடைய நூலை வெளியிட நான் அலைந்தபோது அதனை வெளியிடக் கழகந்தான் முன்வந்தது. அப்போது திரு. சுப்பையா பிள்ளை அவர்களின் மருமகன் திரு. கல்யாணசுந்தரம் அவர்கள் எங்களோடு இருந்து அதனை வெளியிட அயராது உழைத் தார்கள். அவர்களுக்கு நான் நன்றி செலுத்த வேண்டும்.

"இப்படி மருத்துவ நூல்கள் தமிழில் வெளிவந்து கொண் டிருக்கும்போது, மருத்துவக் கல்லூரி நூலகங்களில் இப்படிப் பட்ட நூல்கள் வைக்கப் படுவதில்லை என்பதையும், தமிழக மருத்துவக் கல்லூரி மாணவர்களுக்கு மருத்துவக் கலை நூல்கள் மருத்துவக் கல்லூரி நூலகங்களிலிருந்தே கிடைப்பதில்லை என் பதையும் அறியும்போது சற்று வருத்தமாகத்தான் இருக்கிறது. தலைவரவர்கள் மருத்துவக் கல்லூரிக்கு முதல்வராக இருப் பதனால், இத்தகைய தமிழ் நூல்களையும் நூலகங்களில் வைப்பார் களானால் என் போன்றவர்கட்கு ஆக்கமும் ஊக்கமும் ஏற்பட்டு மேலும் புத்தகங்களை வெளியிடத் தயக்கமிருக்காது. 'நரம்பு மருத்துவம்' மிக அழகாகவும், நன்றாகவும், படிப்பதற்கு இனிமை யாகவும் அமைந்திருக்கிறது. அதற்காக டாக்டர் லோகமுத்துக்

கிருட்டிணன் அவர்கட்கும் சை. சி. நூற்பதிப்புக் கழகத்தார்க்கும் என்னுடைய பாராட்டுகளைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்," என்றார்.

நாம்பு மருத்துவத் துறைப் பேராசிரியர் டாக்டர் கா. சேகந்நாதன் அவர்கள் பேசுகையில்,

''மருத்துவம் தமிழில் இருந்தால் நம்மவர்கள் எளிதாகப் படித்துப் புரிந்து கொள்ள முடியும். இம் மாதிரி புத்தகங்கள் மேலும் பல வெளிவர வேண்டும். கழகம் இம் மாதிரியான நூல்களை வெளியிட முன்வந்தது பாராட்டத்தக்கது.

''இதனை இதனால் இவன்முடிக்கும் என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்''

என்பதற்கேற்ப மருத்துவத் துறையிலே ஓர் அரிய புத்தகத்தை எழுத டாக்டர் லோகமுத்துக் கிருட்டிணன் அவர்களைத் தேர்ந்தெடுத்தது மிகவும் சரியான முறையாகும். டாக்டர் லோகமுத்துக்கிருட்டிணன் இதுபோல் மேலும் பல புத்தகங்களை எழுதுமாறு இறைவனை வேண்டிக் கொண்டு அவருக்கு என் வாழ்த்துகளைக் கூறுகிறேன்'' என்றார்.

நரம்பு மருத்துவத் துறைத் தலைவர் டாக்டர் பா. இராமமூர்த்தி அவர்கள் பாராட்டுரை வழங்குகையில்,

''1913-14 இல் டாக்டர் லட்சுமிபதி தெலுங்கில் இம் மாதிரி நூல் எழுதினார். தமிழில் அம் மாதிரி இல்லையே என்று ஆசைப்பட்டேன். தமிழில் ஏதாவது செய்ய வேண்டுமென்றும் நான் ஆசைப்பட்டேன். ஆனால், அது முடியாமற் போயிற்று. நாம் செய்ய முடியாத காரியத்தைக் கிருட்டிணன் செய்தது பெருமையாக இருக்கிறது. நம் தேசத்தில் தமிழில்தான் எல்லாம் வழங்குகின்றன. இருந்தாலும் தமிழைத் திணிக்கக் கூடாது. அது தானாக வளரவேண்டும். அதற்கு இம் மாதிரி புத்தகங்கள் தாம் அவசியம். இப் புத்தகம் எளிய நடையிலே கடினமில்லாத நல்ல தமிழில் எழுதப்பட்டிருக்கிறது. தமிழைக் கடினமாக்காமல் எளிமையாக்க வேண்டும். டாக்டர் லோக முத்துக்கிருட்டிணன் தமிழ்த் தொண்டிலே மட்டுமின்றி மருத்துவத் துறையிலேயும் உலகில் உயர்ந்த நிலைக்கு வர வேண்டும் என்று வாழ்த்துகிறேன்'' என்றார்.

**நூல் வெளியீடு :**

அடுத்து நல்வாழ்வுத் துறை அமைச்சர் மாண்புமிகு பேராசிரியர் அன்பழகன் அவர்கள் நூலினை வெளியிட அதனை மருத்துவக் கல்வித் துறை இயக்குநர் டாக்டர் நாராயணன் அவர்கள் பெற்றார்கள். அமைச்சர் பேராசிரியர் அவர்கள்

நூலாசிரியருக்குப் பொன்னுடை போர்த்திச் சிறப்பித்து ஆற்றிய உரை:

"மிக உயர்ந்த நுண்ணறிவு வாய்ந்தவர்களாலே வளர்க்கப் படுகிற நரம்பு மருத்துவம் இன்றைய தினம் சிறந்ததொரு தமிழ் ஏடாகவும் வெளிவருகின்றது.

"இந்நூலாசிரியரின் திறமையை அத் துறையிலுள்ள மற்றவர்கள் பாராட்டினாலுங்கூட, அத் துறையின் தலைவர் டாக்டர் இராமமூர்த்தி அவர்கட்கு அது வியப்பாகத்தான் இருந்தது. ஏனென்றால், எவ்வளவு திறமையுடையவர்களாக இருந்தாலும் தம்மிடத்திலே படித்து வளர்ந்தவர்கள் ஒரு புதிய துறையிலே பணியாற்றுகிறபோது, அதனுடைய விளைவுகள் என்னாகுமோ என்ற ஐயம் ஒரு சிலருக்கு ஏற்படுவது துண்டு. அந்த வகையிலே, இவையெல்லாம் தமிழிலே வர ஆரம்பித்திருக்கின்றன. இனி என்னென்ன குழப்பங்கள் வருமோ என்று டாக்டர் இராமமூர்த்தி அவர்களுக்கு ஒரு சந்தேகம் வர ஆரம்பித்திருக்கிறது.

"திரு. இராமமூர்த்தி அவர்கள், தமிழைத் திணிப்பதாகக் கருதுவதற்குக் காரணம் பழக்கம்தானே தவிர வேறு அன்று. நம்முடைய மூளைக்கு எத்தனையோ குறைபாடுகள் உள்ளன. மூளை எவ்வளவு அற்புதமானதாக இருந்தாலும் அதைப்போலப் பழக்கத்திற்கு அடிமையாகும் ஒன்று உலகத்திலே வேறு கிடையாது. மனிதன் எந்தெந்த உணர்வுகளுக்குத் தன்னை ஆளாக்கிக் கொள்ளுகிறானே அந்தந்த உணர்வுகளுக்கு மூளை அடிமைப்பட்டு விடுகிறது. அதனை மாற்றுவது கடினம். ஒரு பகுத்தறிவுவாதியைப் பக்தனாக மாற்றுவதோ வெறும் மூட நம்பிக்கையுடைய பக்தனைப் பகுத்தறிவுவாதியாக மாற்றுவதோ கடினம், காரணம், அவர்கள் அந்தந்த எண்ணங்களுக்குத் தம்மை ஆட்படுத்திக் கொள்ளுகிறார்கள். அதுபோல ஒரு மொழியிடத்திலே ஒருவருக்கு ஆசை பிறந்து விடுமானால் தாங்கள் அந்த அளவுக்குப் பழகாத-பயிற்சியில்லை ஈடுபடாத பிறிதொரு மொழியிலே காணுகிறபோது ஏற்படாது.

"டாக்டர் இராமமூர்த்தி போன்று மிக நீண்ட நாள் ஆங்கிலத்திலேயே மிக நுணுக்கமான கருத்துகளைப் பயின்றவர்களுக்குத் தமிழிலே பயிலும்போது தாங்கள் பார்த்துப் பழகிய நண்பர் வேறோர் உடையிலே வருவதைப் போலத் தெரியுமே தவிர—சாதாரணமாகப் புடைவைக் கட்டிக் கொண்டு வருகிற மனைவி கவுன்போட்டுக் கொண்டு வந்தால் எப்படி இருக்குமோ அதைப்போல இராமமூர்த்தி அவர்களுக்கு ஒரு மலைப்பு ஏற்படுகிறது. ஆனால், அறிவியலுக்கு மொழி ஒரு தடையன்று.

எல்லா மொழிகட்கும் அறிவியல் கருத்தைச் சொல்லுகிற ஆற்றல் உண்டு. அந்த ஆற்றலிலே தமிழ் மொழியின் ஆற்றல் எந்த வகையிலும் குறைவுடையதன்று. ஒரு நூலன்று - ஒரு பத்து நூல் வெளிவந்த பிறகுதான் அந்தக் கருத்து செம்மையாக முழு வடிவம் பெற்று நம்மாலேயே, அந்த மொழியிலேயே பிறருடைய ஐயத்திடற்கிடமின்றி விளங்கிக் கொள்ளத் தக்க வாய்ப்பு நமக்குக் கிடைக்கும். அந்த வகையிலே இந்த நரம்பு மருத்துவம் என்ற நூல் முதல் முயற்சி. முதல் முயற்சியாக இருக்கின்ற போது அஃது எவ்வளவு நன்ருக எழுதப்பட்டாலுங்கூட இன்னும் பல முயற்சிகள் - இன்னும் பலர் முயற்சிகள் வருகிற போது அஃது ஆங்கில நூல்களிலே காணப்படுகிற அதே விளக்கத்தை - தெளிவைப் பெற்றதாக வரக்கூடும். இது பல நேரத்தில் முனை முரிந்த முயற்சியாக - பயன் குறைந்த முயற்சியாக ஆகி விடுவதும் உண்டு. ஆனுல், இந்த ஆசிரியர் அந்தத் துறையிலே முதல் நூல் வரைந்த ஆசிரியர்களுடைய கருத்துகளையெல்லாம் தேர்ந்து தெளிந்து - தமக்கொரு தெளிவு ஏற்படுத்திக் கொண்டு இந்த நூலை எழுதியிருக்கின்ற காரணத்தால் முதல் முயற்சி கூட வெற்றிகரமாக அமைந்திருக்கிறது. அந்த முறையிலே இவர் பாராட்டப்பட வேண்டியவராவார்'' என்ருர். அத்துடன் தமிழ் மருத்துவம், அதன் தொன்மைச் சிறப்பு இன்னபிற பற்றியும் சீனம், சப்பான் முதலிய நாடுகளில் காணப்படும் மருத்துவ முறைகள் பற்றியும் விளக்கிப் பேசினுர்.

தொழிலியல் நுட்பக் கல்வி இயக்குநர் டாக்டர் வி. சி. குழந்தைசாமி அவர்கள் பாராட்டுரை வழங்கு முகத்தான் பேசியதன் சுருக்கம்:

> ''சென்றிடுவீர் எட்டுத்திக்கும் கலைச்செல்வங்கள்
> யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்''

என்று பாரதியார் கூறியதுபோல் எத்தனையோ தமிழறிஞர்கள், தமிழ் இளைஞர்கள் எட்டுத்திக்கும் சென்ருர்கள்; பல்வகைக் கலைகளையும் கற்ருர்கள்; கற்றுத் தமிழகத்துக்கு வந்தார்கள். ஆனுல், தாம் பெற்ற அந்தச் செல்வங்களைத் தமிழிலே சேர்க்காது தவறிவிட்டார்கள்.

''கிட்டத்தட்ட ஐந்தரைக் கோடி மக்களைக் கொண்ட பிரிட்டனில் ஆண்டுதோறும் 32 ஆயிரம் நூல்கள் வெளியாகின்றன. ஆறு கோடி மக்களைக் கொண்ட செருமனியில் ஆண்டுதோறும் 45 ஆயிரம் நூல்கள் வெளிவருகின்றன. அமெரிக்கா, ரஷியா ஆகிய இரண்டு நாடுகளிலும் ஆண்டு தோறும் 80 ஆயிரம் நூல்கள் வெளியாகின்றன. ஆனுல், தமிழிலே ஆண்டுதோறும் எவ்வளவு நூல்கள் வெளியாகின்றன

என்ற கணக்கைச் சற்று முயற்சி செய்து பெற்றேன். ஆண்டுக்கு ஆயிரம் நூல்கள்தாம் இங்கு வெளியாகின்றன. இந்த ஆயிரம் நூல்களில் கதை காவியம் கட்டுரை போன்றவை உள்ளன. அவற்றுள்ளும் 'மருங்காபுரி மர்மக் கொலை' 'இரவு ராணியின் இன்ப லீலைகள்' என்ற தலைப்பிலேதான் பெரும் பாலன அமைந்துள்ளன.

"மேல் நாடுகளில் வெளி வரும் நூல்களில் 60 சதவிகிதம் அறிவியல் நூல்கள், தொழில் நூல்கள். தமிழகத்தில் நூற்றுக்குப் பத்து நூல்களாவது அறிவியல் துறைகளில்-தொழில் துறைகளில் வெளிவருகின்றனவா என்றால் இல்லை யென்றுதான் சொல்லவேண்டும்.

"பல்வகை அறிவைப் பெறுவதற்கு நமக்கு ஆங்கில அறிவு வேண்டும். அது தமிழ் மக்களிடையே பரவலாக வளர்வதற்கு, அது தமிழிலே இருந்தாக வேண்டும். நாம் ஓரளவு முன்னேறி இருக்கிறோம் என்றாலும், அறிவியல் துறையிலே முன்னேறி இருக்கிறோமா என்றால், கிட்டத்தட்ட இல்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

"நரம்பு மருத்துவம்" என்ற இந்த நூலைப் படித்தபோது, மேலும் மேலும் படிக்க வேண்டும் என்ற ஆர்வம் எனக்கு ஏற்பட்டது. ஒரு நூல் சிறந்தது என்பதற்கு இதைவிடச் சிறந்த சான்று தேவை இல்லை. இப்படிப்பட்ட நூலைத் திரு டாக்டர் லோகமுத்துக் கிருட்டினன் அவர்கள் எழுதத் துணிந்ததே பாராட்டத் தக்கது. இஃது அவரது முதல் முயற்சி. இது போன்ற நூல்களை அவர் மேலும் எழுதுவார் என்று நம்புவோம். எழுத வேண்டும் என்று கேட்டுக் கொள்வோம்.

"எழுதுவதற்கு ஆசிரியர்கள் முன்வந்தாலும், அதை ஊக்குவிப்பதற்கு ஒருவர் வேண்டும். திரு. சுப்பையா பிள்ளை யவர்கள் அந்த அளவுக்கு ஆசிரியர்களைத் தூண்டி-பார்த்துப் பேசி-எழுதிக் கொடுங்கள் என்று கேட்டு நூல்களை வெளி விடுவார். அப்படிப்பட்ட முயற்சியில் அவர் கண்ட வெற்றியின் பயனாகத்தான் இந்த நூல் வெளிவந்திருக்கிறது. 1595ஆவது நூல் இது. எனக்குத் தெரிந்து தமிழகத்திலுள்ள எந்தப் பல்கலைக் கழகமும் இத்தனை நூல்களை வெளியிட்டிருப்பதாக நினைவில்லை. ஓர் அரசு வேண்டுமானால் செய்யலாம். ஆனால் ஒரு தனி நிறுவனம் இத்தனை நூல்களை வெளியிட்டிருப்பதாகத் தெரியவில்லை.

"வணிக நோக்கம் என்ற எண்ணமே இல்லாமல், ஒரு மொழியிலே சில உண்மைகள் இடம் பெற வேண்டும்—சில அறிவு வளர்ச்சி ஏற்பட வேண்டும் என்ற ஒரே நோக்கோடு இந்தப் பணியைச் செய்வதற்கு ஐயா அவர்களுக்கு யாருமே

திகரில்லை. அவரைப் புகழவேண்டும் என்பதற்காகச் சொல்ல வில்லை. நாம் அப் பணியை உணர வேண்டும். யாருக்கு நாம் நன்றி செய்யக் கடமைப்பட்டிருக்கிறோமோ அவர்களுக்கு நன்றி செய்ய வேண்டும். அந்தப் பண்பாடு நமக்கு இருக்க வேண்டும் என்பதற்காகச் சொல்லுகிறேனே தவிர, அவரைப் புகழ வேண்டும் என்பதற்காகக் கூறவில்லை. அவர்களுக்கும் திரு. லோகமுத்துக்கிருட்டிணன் அவர்கட்கும் என்னுடைய பாராட்டு களைக் கூறி அமைகிறேன்.''

நூலாசிரியர் நன்றி உரை:

'நரம்பு மருத்துவம்' நூலாசிரியர் டாக்டர் லோகமுத்துக் கிருட்டிணன் அவர்களின் நன்றியுரை:

''இங்குக் குழுமியுள்ள தமிழ்க் கடல்களும், அறிவுக் களஞ்சியங்களும் என்னுடைய ஒரு சிறு நூலைப் பாராட்டு கிருர்கள் என்ருல், அஃது என்னுடைய தகுதியைக் காட்டவில்லை. அவர்களுடைய அன்பின் மிகுதியினையே காட்டுவதாகும். நான் இம் முயற்சியில் ஈடுபட்டதற்குக் காரணம், தமிழ்த் தாய்க்கு நான் ஆற்ற வேண்டிய கடமையை ஆற்ற வேண்டும். அதிலும் விரைவிலே ஆற்ற வேண்டும் என்ற ஆர்வமேயாகும். அது மட்டுமன்று; நோய்களைப் பற்றிய அறிவு மக்களிடையே பரவினுல், அவர்கள் நோய்களைத் தடுக்கவும், நோயின் முதல் நிலையிலேயே மருத்துவர்களை நாடி, தக்க உதவி பெற முடியும் என்ற நோக்கமும் ஆகும். இந்த இரு நோக்கங்களும் நிறை வேறுமானுல் என்னுடைய கடமையை நான் செய்தவனுவேன்.

''இது போன்ற முயற்சிகளில் பேரறிஞர்களும் சேர்ந்து செயல்பட்டால், கல்லூரிப் பாட நூல்களைக் கூடத் தமிழில் இயற்ற முடியும். உங்கள் அனைவருக்கும் நன்றி தெரிவித்துக் கொள்வதுடன், குறிப்பாகப் பல வேலைகளுக்கிடையே இங்கு வந்து இந் நூலினை வெளியிட்ட மாண்புமிகு பேராசிரியர் அவர் கட்கும், விழாவிற்குத் தலைமை தாங்கிய டாக்டர் நடராஜன் அவர்கட்கும், வாழ்த்துரை வழங்கிய என்னுடைய அருமைப் பேராசிரியர் டாக்டர் இராமமூர்த்தி அவர்கட்கும், டாக்டர் செகந்நாதன், டாக்டர் குழந்தைசாமி, டாக்டர் கண்ணப்பன் ஆகியோருக்கும், இந்நூலை எழுத எனக்கு ஊக்கமளித்த கழக ஆட்சியாளர் உயர்திரு சுப்பையா பிள்ளை அவர்கட்கும், எனக்கு அவ்வப்போது உறுதுணை புரிந்து வழிகாட்டிய கழகப் பொது மேலாளர் திரு. கல்யாணசுந்தரம் அவர்கட்கும் எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன். வணக்கம்.

நூலாசிரியர் நன்றியுரைக்குப்பின் நாட்டு வாழ்த்துடன் விழா இனிது முடிந்தது.

# தமிழ் மாமணி லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் மணிவிழா

முத்தமிழ் வித்தகரும் தமிழ் வாழத் தாம் வாழ்பவரும் தமிழின் வளர்ச்சிக்காகத் தம்மையே ஈடுபடுத்திக் கொண்டவருமான அண்ணாமலைப் பல்கலைக் கழக முன்னாள் தமிழ்ப் பேராசிரியர், பண்டிதமணி லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்களின் மணிவிழா சீருடனும் சிறப்புடனும் திசம்பர் 20ஆம் நாள் சென்னை, மயிலை இராசேசுவரி திருமண மண்டபத்தில் அவர்தம் அன்பசால் மாணவர் முன்னின்றமைத்த விழாக்குழுவினரால் கொண்டாடப்பெற்றது. அடக்கமும் எளிமையும் ஒருருக் கொண்ட பேராசிரியர் இவ் விழாவினை ஒரு சிறிதும் விரும்பாதபோதிலும் அவர்தம் அன்பு மாணவர்களின் ஆணைக்குட்பட்டே இதற்கு இசைவளித்தனர். விழாவிற்குத் தமிழாய்ந்த ஆன்றோரும் ஆன்றவிந்தடங்கிய செட்டி நாட்டுப் பெருமக்களும் திரளாய் வந்திருந்து சிறப்பித்தமை பேராசிரியரின்பால் எல்லோர்க்கு மிருந்த அன்பையே எடுத்துக் காட்டியது.

இசைத் தமிழ்த் தென்றலாக வாழும் மதுரை சோமு அவர்கள் இறை வணக்கப் பாடலையும் பேராசிரியர்மீது கவியரசு கண்ணதாசன் அவர்களும் டாக்டர் சுப. அண்ணாமலையும் இயற்றிய பாடல்களையும் பாங்குறப் பாடினர்.

விழாக்குழுவின் சார்பில் வரவேற்புரை நிகழ்த்திய டாக்டர் ஆறு. அழகப்பன் "காலங்களில் வசந்தம்; மலர்களில் முல்லை, விழாக்களில் பேரா. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் மணிவிழா என்று கூறத்தக்க அளவிற்கு விழா சிறப்பாக அமைந்துள்ளது" என்றார். மேலும், "நம்முடைய மாண்புமிகு கல்வி அமைச்சர் நாவலர் அவர்கள் நம் அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பழைய மாணவர்களுள் ஒருவர். நம் பேராசிரியரின் தலைமாணாக்கர்களில் ஒருவர். அவர்களை வருக என வரவேற்கின்றேன். தலைமை தாங்க வந்திருப்பவர் சிலம்புச் செல்வர் அவர்கள் தமிழ் முனி: சொல்லேருழவர். ஊர் என்றால் உறையூர், பட்டினம் என்றால் காவிரிப்பூம்பட்டினம்; அரசர் என்றால் செட்டி நாட்டரசர் என்னும் வகையில் ஆறையும் நாருக்கும், தொட்டதெல்லாம் துலங்க வைக்கும் ராசா சர் முத்தையா செட்டியார் பேராசிரியரின் வாழ்க்கை வரலாற்று நூலை வெளியிடுவார்கள். 'தமிழ் மாமணி' என்ற பட்டத்தை வழங்க வந்திருப்பவர் எண்பது வயது இளைஞரான தி. மு. நாராயணசாமிப் பிள்ளை அனைவரையும் வருக வருக என வரவேற்கிறேன்" என்றார்.

விழாத் தலைவரான சிலம்புச் செல்வர் ம. பொ. சிவஞானம் அவர்கள் தம் தலைமையுரையை அடுத்து நிகழ்த்தினர். "நம்முடைய பேராசிரியர் அடக்கமாகவும் ஆழ்ந்த தமிழ்ப் பற்றோடும் நிரம்பிய தெய்வப் பற்றோடும் நீண்ட நெடுங் காலமாகத் தொண்டாற்றி வந்துள்ளார்கள். தாமேயும் தக்க தமிழறிஞர்களிடமும் தனிப்பட்ட முறையில் தமிழ் கற்றுப் பல்கலைக் கழகத்தில் புகுந்து பேராசிரியர் பதவிவரை உயர்ந்து விட்டார்கள் என்றால் 'தமிழ் வளர்ச்சிக்குப் பாடுபட்டவர்கள்' என்று இவரைவிட வேறு யாரைச் சான்றாகச் சொல்ல முடியும்?

அவர் இவ்வளவு தூரம் முன்னேறியதற்குக் காரணம் செட்டி நாட்டரசர் குடும்பம் என்று நான் சொல்லாமலே உங்களுக்குத் தெரியும். இராமாயணத்தில் மிகப் பெரிய ஆற்றல் படைத்தவனாக அநுமன் காட்டப் பெறுகிறான். ஆனாலும் அவனும் இராமனைக் கண்ட பின்னரே பேராற்றல் படைத்தவனானான். அவ்வாறே அண்ணாமலை அரசரைக் கண்ட பின்னரே பேராசிரியர் பேராற்றல் பெற்றார்கள்.

அவர்கள் நல்ல துறையில், நாடு வளரக்கூடிய துறையில் பணி செய்து, அதனையும் நிறைவு பெறச்செய்து, ஓய்வு பெற்று இன்று மன நிறைவுடன் மணிவிழா காணுகிறார்கள்.

செட்டி நாட்டரசர் குடும்பம் ஆரம்பப் பள்ளியில் தொடங்கிப் பல்கலைக் கழகம் வரை கல்வியில் அத்தனை நிலைகளிலும் ஒரு குடும்பம் பொறுப்பெடுத்து நிலையங்களை நடத்துவதற்கு இன்னொரு குடும்பம் இணையில்லை தமிழ்நாட்டில் என்று சொல்வதற்குச் சிறப்புப் பெற்றுள்ளது என்றால் அது செட்டி நாட்டிற்கு மட்டும் சிறப்பல்ல, தமிழ் நாடு அனைத்திற்குமே சிறப்பு. அந்தப் பெரும் பணியில் அவருக்குக் கைகொடுத்துதவி வந்தவர் நம் பேராசிரியர் அவர்கள். அவர்கள் கல்விக்கும் தமிழிசைக்கும் ஆற்றும் தொண்டு அவருக்கு அவற்றிலுள்ள ஆழ்ந்த பற்றைக் காட்டுகிறது. அவர்கள் நூறாண்டு வாழ்க என வாழ்த்துகிறேன்.'

யாதவர் கல்லூரி முதல்வர் திரு. டி. ஏ. சொக்கலிங்கம் அவர்கள் தமிழக ஆளுநர் கே. கே. ஷா; அண்ணாமலை, மதுரை, கோவை வேளாண்மையில் பல்கலைக் கழகங்களின் துணை வேந்தர்கள், திருச்சி, மதுரை, லண்டன் நகரத்தார் சங்கங்கள் அனுப்பியிருந்த வாழ்த்துச் செய்திகளைப் படித்தார்கள்.

மாநிலக் கல்லூரி தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் மெ. சுந்தரம் அவர்கள் சிறப்புப் பட்டய அறிமுக உரையை ஆற்றினர். ஏறத்தாழ 50 ஆண்டு காலமாகத் தென்னாட்டின் பொன்னேட்டில் புதிய பல ஏடுகளை உருவாக்கிய ஒரு பேராசிரியப் பெருமகனுக்கு நாம் இங்கே விழாக் கோலம் காண்கிறோம். இவர்கள் தமிழ்ப் புலவருக்கு வழிகாட்டியாகத் திகழ்ந்திருக்கிறார்கள்.

செட்டி நாட்டரசர் குடும்பம் இந்த மணியை முதலில் இலங்கையில் கண்டெடுத்தது. அண்ணாமலை அரசர் இம் மணியைச் சிதம்பரத்திற்குக் கொண்டு வந்தார். தமிழ் இயலுக்கும் இசைக்கும் நாடகத்துக்கும் இம் மணி பல தொண்டுகளைச் செய்திருக்கிறது.

இவர்களுக்கு முன்பே 'பண்டித மணி' என்ற பட்டத்தை மேலைச் சிவபுரி சன்மார்க்க சபையார் அளித்துள்ளனர். இன்று பழைய மாணவர்கள்கூடி இவர்களுக்குத் 'தமிழ் மாமணி' என்ற பட்டத்தை வழங்க இருக்கிறோம். நாம் இன்று ஒரு வீரப் பெருமகனுக்கு, வெற்றித் திரு மகனுக்கு, தமிழ்த் தாயின் தலைமகனுக்கு இந்தப் பட்டத்தை அளிக்கிறோம். இதனை மாண்புமிகு நாவலர் பெருமான் அவர்கள் வழங்குவார்கள்."

பேராசிரியரின் பெரும் பணியை எடுத்தியம்பும் மெய்க் கீர்த்தியைப் பெரிய வெள்ளிப் பட்டயத்தில் பொறித்து வழங்கினர்.

மாண்புமிகு நாவலர், டாக்டர். இரா. நெடுஞ்செழியன். அவர்கள் பேராசிரியர் அவர்களுக்குத் 'தமிழ் மாமணி' என்ற பட்டத்தை வழங்கிப் பாராட்டிப் பேசினார்.

"இந்த விழா ஒரு தமிழ்ப் பேராசிரியருக்கு நடைபெறுகிறது என்பதில் மகிழ்ச்சி. மணிவிழா சிலம்புச் செல்வர் ம. பொ. சி. தலைமையில் நடைபெறுகிறது என்பதில் இரட்டிப்பு மகிழ்ச்சி. அதிலும் என்னுடைய ஆசிரியருக்கு நடைபெறுகிறது என்பதில் மும்மடங்கு மகிழ்ச்சி. அவருக்குத் 'தமிழ் மாமணி' என்ற பட்டத்தை வழங்கும் பேற்றினை எனக்குத் தந்துள்ளார்கள். பேராசிரியர் இராமநாதன் செட்டியார் அவர்களுக்கு அவர்களிடம் பயின்ற மாணவர்கள் காட்டுகின்ற பாராட்டுதலையும் போற்றுதலையும் தாங்கள் கொண்டிருக்கும் நல்ல அன்பினையும் வெளிப்படுத்துகின்ற வகையில் 'தமிழ் மாமணி' என்ற பட்டத்தைத் தேர்ந்தெடுத்துள்ளார்கள்.

பேராசிரியர் இராமநாதன் செட்டியார் அவர்கள் 21 வயதில் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்திற்கு ஆசிரியராக வந்தவர்கள். நீண்ட காலம் பணியாற்றியவர்கள். 1939 லிருந்து 44 வரை ஐந்தாண்டு காலம் நானும் பேராசிரியர் அன்பழகன் அவர்களும் தொடர்ந்து படித்த காலத்தில் ஐந்தாண்டு காலமும் எங்களுக்குப் பாடமெடுத்த பெருமை பேராசிரியர் அவர்களைச் சாரும். அவர்களிடம் பயின்றோம் என்பதில் எங்களுக்குப் பெரு மகிழ்ச்சியுண்டு. அப்போதிருந்த ஆசிரியர்களில் மிகவும் இளைஞராயிருந்தவர் இவர்தாம். அந்த இளம் வயதிலேயே தமிழ் ஆர்வம் கொண்டு, தமிழிலே வல்லமை பெற்றுத் தமிழ்ப் பேராசிரியர் நிலைக்கு உயர்ந்து, தம்முடைய திறமையையும் தகுதியையும் ஆண்டுக்கு ஆண்டு வளர்த்து எல்லோருடைய பாராட்டுதல்களையும் புகழுரைகளையும் பெற்று மிகச் சிறப்புடன் விளங்கியவர்கள். வித்துவான் தேர்வில் 1000 ரூபா. பரிசு பெற்றவர்கள். மாணவர்களுடன் நெருங்கிப் பழகியவர்கள். எல்லா ஆசிரியர்களிடமும் நெருங்கிப் பழகியவர் இவர் ஒருவரே. அப்படிப்பட்டவர் மணிவிழா காண்கிறார் என்பதில் மகிழ்ச்சி.

அண்ணாமலைப் பல்கலைக் கழகத் தமிழ்த்துறை பொறுப்புகள் வளர வளர இவரும் அவற்றை ஏற்றுக்கொண்டு, பல்வேறு பல்கலைக் கழகங்களுடன் தொடர்பு கொண்டு தமிழ்ப் பணியாற்றிச் சிறந்த தமிழ் நூல்களையெல்லாம் எழுதித் தம்முடைய சொல் வன்மையினாலும் எழுத்து வன்மையினாலும் எல்லோருடைய ஆதரவையும் பாராட்டுதல்களையும் மிகச் சிறப்பாகப் பெற்றவர் இவர்கள். தமிழுக்கு ஆக்கம் தேடிய சிறந்த அறிஞர்களை உருவாக்கிய பேராசிரியர் அவர்களைப் பாராட்டுவதில் நமக்கெல்லாம் பெரு மகிழ்ச்சி."

அடுத்து திரு. சோம. இளவரசு அவர்கள் சொக்குத் தமிழில் சுவைபட எழுதியுள்ள 'பேராசிரியர் அவர்களின் வாழ்க்கை வரலாற்று நூலான "தமிழ் மாமணி லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார்" என்ற நூலை வெளியிட்டுப் பேராசிரியருக்குப் பொன்னாடை போர்த்தவேண்டுமென்று செட்டி நாட்டரசர் அவர்களை டாக்டர். சி பாலசுப்பிரமணியம் கேட்டுக் கொண்டார். 'பேராசிரியருடைய வாழ்க்கை வரலாறு தனி மனிதனுடைய வாழ்க்கை இல்லை. தமிழியக்கத்தின் வரலாறு; உழைப்பால் உயர்ந்து - எங்களுடைய அரசர் பெருமான் அரவணைப்பால் வளர்ந்து, தமிழினைத் தொண்டால் நிறைந்து - இன்று 60 ஆண்டுகள் நிறைந்த வரலாறு. இத்தகைய எடுத்துக்காட்டான வாழ்க்கை இளைஞர்களுக்கு உதவும் வகையில் நண்பர் சோம. இளவரசு அவர்களால் சுவையாக எழுதப் பெற்றுள்ளது. நல்லதையெல்லாம் நடத்திக் கொண்டிருக்கும் நம் அரசர் பெருமான் அவர்கள், இதனை வெளியிட்டுப் பேராசிரியர்

அவர்களுக்குப் பொன்னுடை போர்த்தியருள வேண்டுமெனக் கேட்டுக் கொள்கிறேன்.”

செட்டி நாட்டரசர் ராசா சர். முத்தையா செட்டியார் அவர்கள் வரலாற்று நூலின் முதல் படியை நடிப்பிசைச் செல்வர் டி. கே. பகவதி அவர்களிடம் வழங்கிப் பேராசிரியர் அவர்களுக்குப் பொன்னுடை போர்த்திச் சிறப்பித்துப் பாராட்டிப் பேசினார்கள். “இவ் விழாவில் கலந்து கொள்வதில் எனக்கு எவ்வளவு மகிழ்ச்சி இருக்கும் என்பது நான் சொல்லாமலே உங்களுக்குத் தெரியும். பேராசிரியருடைய தந்தையாரவர்கள் கொழும்பில் வாணிபம் செய்துகொண்டிருந்தார்கள். அப்போதே பேராசிரியரவர்களை எனக்கும் என் தந்தையாருக்கும் தெரியும். அதன் பின்னுல்தான் அண்ணுமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியராக வந்தவர்கள். அதற்கு முன்பிருந்தே எங்கள் குடும்ப நண்பர். இளமையிலேயே கவிபாடுவார். என் தந்தையார் 1929இல் கொழும்பிற்குச் சென்றிருந்தபோது ஊர் மக்கள் படித்தளித்த வரவேற்புப் பாடல் நம் பேராசிரியர் இயற்றியதேயாகும். தமிழாலேயே வளர்ந்து தமிழிலேயே இருந்து 21 வயதிலே விரிவுரையாளராகிப் பேராசிரியராகி டீனுகி அயல் நாடுகட்குச் சென்றுவந்து சிறப்புப் பெற்றவர்கள் இவர்கள். தமிழ் மட்டுமே தெரிந்த இவர்கள் உலக மாநாட்டில் போய்த் தமிழின் பெருமையை எடுத்துக் காட்டியவர்கள். நீண்டகாலம் எனக்கும் என் தந்தையாருக்கும் துணையாக இருந்து அண்ணுமலைப் பல்கலைக் கழகத்தையும் தமிழிசைச் சங்கத்தையும் வளர்த்த இவர்களை நான் மகிழ்ச்சியுடன் பாராட்டுகிறேன்.''

உரை நிகழ்த்துகையில் ‘தமிழ் வளர்ச்சிக்காகவும் தமிழ் இசை வளர்ச்சிக்காகவும், பண் ஆராய்ச்சித் துறையிலும் இராமநாதன் செட்டியார் ஆற்றியுள்ள தொண்டை யாராலும் மறுக்கவோ மறக்கவோ முடியாது’ என்று கூறிப் பாராட்டினர்.

அண்ணுமலைப் பல்கலைக் கழக முன்னுள் துணைவேந்தர் திரு. டி. எம். நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் பேராசிரியர் அவர்களின் பெரிய அளவில் அமைந்திருந்த அழகிய திரு உருவப் படத்தைத் திறந்துவைத்து அவர்தம் அரிய பணிகளைப் பாராட்டிப் பேசினுர்.

டாக்டர் வ. சுப. மாணிக்கம், திரு. கோவி. மணிசேகரன் முதலியோர் பண்டித மணியின் அரிய பண்பு நலன்களைப் பாராட்டிப் பேசினர்.

மணிவிழாக் கண்டோருக்குப் பல்வேறு அமைப்புகளின் சார்பில் மலர் மாலைகள் அணிவிக்கப் பெற்றன. ‘சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தின் சார்பில் தாமரைச் செல்வர். வ. சுப்பையா பிள்ளை அவர்கள் சந்தன மாலை அணிவித்துப் பாராட்டிப் பேசுகையில் பேரா. லெ. ப. கரு. அவர்கள் நாற்பது ஆண்டுகட்கு மேலாகக் கழகத்துடன் தொடர்புடையவர்கள் என்று குறிப்பிட்டார். தமிழிசை இயக்கத்தின் தொடக்க காலத்தில் பேராசிரியர் அவர்கள் ‘தமிழிசைச் சங்கத்தை அமைக்க முற்பட்டபோது பெரும்பாலும் சென்னைக்கு வந்தால் சை. சி. கழக மாளிகையில்தான் தங்குவார்கள் என்முர் அவர். கழகத்தின் சார்பில் நடைபெற்ற முதல் சிற்றிலக்கிய மாநாட்டின் தலைவராகச் சிறந்த பணியாற்றியதை நினைவு கூர்ந்தார், கழகத்தோடு நெருங்கிய தொடர்புடையவர்களுள் பேராசிரியர் அவர்களும் குறிப்பிடத் தக்க ஒருவர்’ என்று குறிப்பிட்டார்கள்.

சிதம்பரம் கோயில் சார்பாகவும், தருமபுரம், திருப்பனந்தாள் மடங்கள் சார்பாகவும், நகரத்தார் சங்கம், அண்ணாமலைப் பல்கலைக்கழகம், திருச்சி, மதுரை. தூத்துக்குடி தமிழ்ச் சங்கங்களின் சார்பிலும் மணி விழாத் தலைவருக்கும் தலைவிக்கும் மலர் மாலைகள் அணிவிக்கப் பெற்றன.

இறுதியில் தங்களுக்கு அளிக்கப்பட்ட பாராட்டுதல்களுக்குத் திரு. இராமநாதன் செட்டியார் தம் சார்பிலும் தம் துணைவியார் சார்பிலும் நன்றி தெரிவித்துப் பேசினர்.

விழா முடிந்தவுடன் விழாக் குழுவினர் செவிக்குணவு அளித்து முடித்தபின் பேராசிரியர் லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் விழாவிற்கு வந்திருந்த அனைவருக்கும் சுவையான வகைவகையான அறுசுவை விருந்தை அளித்தது உண்டு நினைத்து மகிழத்தக்கதாகும்.

மறுநாள் (21-12-75) அன்று சென்னைக் கந்த கோட்டத்தில் திருமுறை இசை ஓதுவார்கள் கூடிப் பேராசிரியருக்குப் பரிவட்டம் அணிவித்துப் பாராட்டிதழ் வாசித்தளித்தனர்.

**பேராசிரியரின் வாழ்க்கைக் குறிப்பு**

செட்டிநாட்டுச் சிற்றூரான நெற்குப்பையில் 1915 இல் பிறந்தவர் பேராசிரியர். இளமையிலேயே தக்க தமிழறிஞர்பால் தனிப்பட்ட முறையில் தமிழ் கற்று மதுரைத் தமிழ்ச் சங்கம் நடத்திய 'பண்டிதத்' தேர்வு பெற்றவர். பின்னர், சென்னைப் பல்கலைக் கழகத்தின் வித்துவான் தேர்வில் முதல் வகுப்பில் முதல்வராகத் தேறி ஆயிரம் வெண்பொற் காசுகளைப் பரிசாகப் பெற்றவர். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆசிரியப் பயிற்சியும் பெற்றவர்.

1939 இல் இவர்கள் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆராய்ச்சித் துறையில் சேர்ந்த இவர் படிப்படியாக உயர்ந்து, தமிழ் மேற்கலைத் துறைப் பேராசிரியராக அமர்ந்தனர். 1953 முதல் 15 ஆண்டுகள் கீழைத்திசைக் கல்விப் பகுதித் தலைவராகத் திகழ்ந்தவர். அப் பல்கலைக் கழக ஆட்சிக் குழுவிலும் உறுப்பினராக இருந்துள்ளார்.

பேராசிரியரிடம் பயின்ற மாணவர்கள் இன்று இந்தியா மட்டுமன்றி உலக முழுவதும் பரவியுள்ளனர். அமைச்சர் பொறுப்பிலிருந்து ஆசிரியர் பொறுப்புவரை பல்வேறு பொறுப்புகளில் இன்று பேராசிரியரின் மாணவர்கள் அமர்ந்துள்ளனர். 'உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும்' எளிய வசதியற்ற குடும்பத்தைச் சார்ந்த மாணவர்களுக்கு அறிவுப் பசியைத் தீர்த்துவைத்த பேராசிரியர் நன்னூலார் வகுத்த இலக்கணத்திற்கு அப்பாற்பட்டவர்.

அண்ணாமலை மட்டுமன்றிச் சென்னை, கேரளா, உசுமானியா, பெங்களூர், ஆந்திரா, வெங்கடேசுவரா போன்ற பல பல்கலைக் கழகங்களில் பல்வேறு குழுக்களில் பேராசிரியர் உறுப்பினராக இருந்து நல்லுரைகளை வழங்கியுள்ளார்.

இந்திய மொழிகளின் ஆக்கத்திற்காக அரும்பணியாற்றி வரும் 'சாகித்திய அகாதெமி'யின் பல்வேறு பணிகளில் பேராசிரியர் பெரும் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். 1801 முதல் 1853 வரை வெளிவந்த அச்சான அரிய தமிழ் நூல்களின் 'நூற்றொகை'யைப் பேராசிரியர் அரும்பாடுபட்டுத் தொகுத்துள்ளார். அந் நூற்றொகை 'இந்திய இலக்கியத்

தின் தேசீய நூற்றொகை' ('The National Bibliography of Indian Literature') என்னும் நூலில் இடம் பெற்றுள்ளது. அகாதெமியின் வேண்டுகோட்கிணங்க, பாரதிய கவிதைத் தமிழ்த் தொகுப்பையும் பேராசிரியர் தொகுத்தளித்தார்.

இளம் பருவ முதல் கவிதை யியற்றுவதில் இவர் வல்லவர். ஆழ்ந்த கருத்துக்களைத் தெளியநடையில் வடித்துத் தரும் ஆற்றலுடைய பேராசிரியர் பல்வேறு கட்டுரைகளையும் அரிய ஆராய்ச்சி நூல்களையும் ஆக்கியுள்ளார். இவர்தம் நூல்கள் பல பள்ளிகளிலும் பல்கலைக் கழகங்களிலும் பாடநூலாகத் திகழ்ந்துள்ளன.

நூலியற்றுவதோடன்றி, அரிய வகையில் மலர்களையும் சிறப்பான முறையில் பேராசிரியர் தொகுத்துள்ளார். அண்ணாமலைப் பல்கலைக் கழக வெள்ளிவிழா மலர், செட்டிநாட்டரசர் முத்தையா செட்டியாரின் மணிவிழா மலர், தமிழிசைச் சங்கத்தின் வெள்ளிவிழா மலர் முதலியவை பேராசிரியரின் தொகுப்புக் கலையை என்றென்றும் விளக்கிக் கொண்டிருக்கும்

1958 இல் கனடா நாட்டிலுள்ள மாண்ட்ரீல் நகரில் நடைபெற்ற காமன்வெல்த் பல்கலைக் கழக மாநாட்டில் பேராசிரியர் அவர்கள் அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தின் சார்பில் கலந்துகொள்ளச் சென்ற போது உலக நாடுகள் பலவற்றிற்கும் சென்று வந்தார்.

உலகத் தமிழ் மாநாடுகள் மலேயாவிலும், சென்னையிலும் நடைபெற்றபோது பேராசிரியர் அவற்றில் பெரும்பங்கு கொண்டதோடு பல குழுக்களுக்குத் தலைமை தாங்கி அவை சிறப்புற நடைபெறத் துணை நின்றார். சை. சி. நூ. கழகம் நடத்திய முதல் சிற்றிலக்கிய மாநாட்டிற்குத் தலைமை தாங்கிய பெருமை பேராசிரியரையே சாரும்.

பேராசிரியரின் பல்வேறு பணிகளில் குறிப்பிடத்தக்க தலையாய பணி தமிழ் இசைப்பணியே யாகும். தமிழிசை இயக்கம் தலையெடுத்த போது அரசர் அண்ணாமலைச் செட்டியார், சர். ஆர். கே. சண்முகம் செட்டியார் ஆகியோருடனிருந்து தமிழிசைச் சங்கத்தை நிறுவிய பெருமை பேராசிரியர் அவர்களையும் சாரும். சென்னையில் ஆண்டுதோறும் 'இசைவிழா'வை நடத்தித் தேமதுரத் தமிழிசையைத் தமிழக முழுவதும் பரப்பினார். தமிழிசையில் வல்ல அறிஞர்களையும் திருமுறைச் செல்வர்களான ஓதுவார்களையும் விழாவைபொட்டி அழைத்து ஆண்டுதோறும் தமிழிசைப் பண் ஆராய்ச்சிக் கூட்டத்தைச் சிறப்பாக நடத்தி வருகிறார். பொருளுதவி செட்டிநாட்டரசரதாயினும் உடலுதவி பேராசிரியரது என்பதைப் பண்ணாராய்ச்சிக் கூட்டத்தில் கலந்து கொள்வோரால் உணர முடியும். கால் நூற்றாண்டாக ஆண்டுதோறும் முன் கூட்டத்தில் நடைபெற்ற நிகழ்ச்சிகள் அனைத்தையும் தொகுத்துக் 'கூட்ட அறிக்கை' யாகத் தவறாது வெளியிட்டு வருகிறார். தமிழிசையின் வரலாற்றை எழுத முற்படுவோர் இவ்வகையில் பேராசிரியர் ஆற்றியுள்ள தமிழிசை ஆராய்ச்சித் தொண்டைப் பொன்னெழுத்துக்களால் பொறித்து வைப்பர் என்பது உறுதி.

'பண்டிதமணி' 'முத்தமிழ் வித்தகர்' 'இலக்கிய வித்தகர்' 'தமிழ் மாமணி' போன்ற பல பட்டங்களைப் பெற்ற பேராசிரியர் லெ ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் நீடூழி வாழ்ந்து தமிழுக்கும் தமிழிசைக்கும் தொண்டுசெய்து மேலும் பல பட்டங்களைப் பெற வேண்டுமென்று தில்லையம்பலக் கூத்தனை இறைஞ்சுகிறோம்.

# செய்திகளும் குறிப்புகளும்

## குமரகுருபரர் குழந்தை வளர்ப்புப் பள்ளி எட்டாவது ஆண்டு விழா

திருநெல்வேலியில் கழகத்தின் மேற்பார்வையில் நடைபெறும் குமரகுருபரர் குழந்தைப் பள்ளியின் எட்டாவது ஆண்டு விழா 29-11-1975 இல் சிறப்பாகக் கொண்டாடப் பெற்றது. அன்று மாலை 5 மணிக்கு இறை வணக்கத்துடன் விழா தொடங்கியது. பள்ளி மேலாளர் வரவேற்புரையும், தலைமை ஆசிரியை அறிக்கையும் வாசித்தனர். தலைமை தாங்கிய பள்ளித்துணை ஆய்வாளர் உயர்திரு ஜெஜிராஜேஸ் அவர்கள் "இப் பள்ளி ஒரு புனிதமான கோவிலைப் போன்றது. 'இளமையிற்கல்' என்ற ஔவைப் பாராட்டியார் அருளியபடி குழந்தைகளை இளமையிலேயே பள்ளிக்கு அனுப்பிக் கல்வி, அறிவு, ஒழுக்கம், பண்பாடு, கலை இவற்றைப் பெறுவதற்கு நல்வாய்ப்பினை உருவாக்கித் தருகின்ற இப் பள்ளியின் ஆட்சியாளரவர்கட்குப் பெற்றோரும் அன்பர்களும் நன்றி செலுத்தக் கடமைப் பட்டிருக்கின்றனர் இப் பள்ளி மேலும் பல நலங்களுடன் வாழ்கவென நாம் வாழ்த்துவோம்" என்று பாராட்டிப் பேசினர். பள்ளிக் குழந்தைகளின் பலவகைக் கலை நிகழ்ச்சிகளைக் கண்டு வந்திருந்தவர் அனைவரும் பெரு மகிழ்வுற்றனர். இறுதியில் திருவாட்டி ஆறுமுக லட்சுமி சூரியநாராயணன் அவர்கள் குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கிச் சிறப்பித்தனர். நாட்டுப் பாடலுடன் விழா இனிது முடிந்தது.

## சங்க இலக்கியங்களின் மாண்புபற்றி ஆளுநர் ஷா கருத்துரை

சங்க இலக்கியங்கள் பற்றிய கருத்தரங்கினைச் சென்னை மாநிலக் கல்லூரியில் 25—12—75 இல் தொடங்கி வைத்த தமிழக ஆளுநர் மாண்புறு கே. கே. ஷா அவர்கள்,

"சங்க இலக்கியங்கள் பரந்த நோக்கம் கொண்டவை. 'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்னும் பொது நெறியைப் புறநானூறு கற்பிக்கின்றது. சங்க இலக்கியங்கள் அந்தக் காலத்திலேயே பொதுநிலை நெறியைப் போதித்தன. சங்ககாலத்து மக்கள் தேவைக்கேற்ப வீரம் காட்டினர். வாழ்வின் சிறப்புகளை அனுபவித்தனர். அழகான பாடல்களைப் புனைந்தனர். வாழ்வின் ஆக்க நெறிகளைப் பேணி அமைதியாக வாழ்ந்தனர்" என்று கூறினர்.

மாணவர்கள் தெருவில் விற்கும் "நோட்ஸ்"கள் மூலம் கல்வி பயில விரும்புவதைத் தவத்திரு குன்றக்குடி அடிகளார் கண்டித்துப் பேசினர். கூட்டத்திற்குத் தலைமை தாங்கிய இராசா சர் முத்தையசெட்டியார். அவர்கள் தமது தலைமை உரையில், "அயல் நாடுகளில் வாழும் தமிழர்களும் தமிழ் நூல்களைப் படித்துப் பயன்பெறும் வகையில் நாம் இங்கிருந்து நல்ல தமிழ் நூல்களை வெளியிட்டு அனுப்ப வேண்டும்" என்று கூறினர்.

டாக்டர் மெ. சுந்தரம் அவர்களும், மற்றும் தென்மாநிலங்களைச் சேர்ந்த 7 பல்கலைக் கழகங்களின் 15 அறிஞர்கள் இக்கருத்தரங்கில்

உரையாற்றினர். மாநிலக் கல்லூரி முதல்வர் ஜே. ராமச்சந்திரன் அனைவரையும் வரவேற்றார்.

## தமிழிசைச் சங்க 33ஆவது ஆண்டு விழா

தமிழ் இசைச் சங்கத்தின் 33ஆவது ஆண்டு விழா, சென்னை அண்ணாமலை மன்றத்தில் 21-12-75இல் எம். எல். வசந்தகுமாரியின் இறை வணக்கப் பாடலுடன் துவங்கிற்று. விழாவிற்குப் புகழ்பெற்ற பரதநாட்டிய பாலசரசுவதி தலைமை தாங்கினர். திரு. டி. எம். நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். தமிழகத் தொழில் அமைச்சர் மாண்புமிகு கே. இராசாராம் அவர்கள் விழாவினைத் துவக்கி வைத்து உரையாற்றினர். அவ்வுரையில், இனிமை மிக்க தமிழிசையில் நமக்குத் தேவையில்லாத-புரியாத புதுப்புது அயல்மொழி இசைகளைக் கலந்து தமிழிசையின் உயர்ந்த பண்பாட்டினை கெடுத்திட வேண்டாம் என்று கேட்டுக்கொண்டார்.

திருவாட்டி பாலசரசுவதிக்கு "இசைப் பேரறிஞர்" என்னும் பட்டத்தை அமைச்சர் இராசாராம் வழங்கினர். அதற்குரிய பட்டயத்தினை எம். எஸ். சுப்புலட்சுமி பால சரசுவதியிடம் அளித்தார். பேராசிரியர் திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் நன்றி நவின்றார்.

## 'சிலம்பொலி' நூல் வெளியீட்டு விழா

தமிழ் வளர்ச்சித் துறைச் செயலாளர் திரு. சிலம்பொலி செல்லப்பன் அவர்கள் எழுதிய 'சிலம்பொலி' என்ற நூலின் வெளியீட்டு விழா 1975 திசம்பர் 20 ஆம் நாள் மயிலை, உட்லண்ட்சு விடுதியில் நடைபெற்றது. தமிழக முதலவர் டாக்டர் கலைஞர் மு. கருணாநிதி அவர்கள் நூலைப் பாராட்டி வெளியிட்டார். சிலப்பதிகாரத்தைப் புதிய கோணங்களில் பார்த்துள்ள இந் நூலைப் பாராட்டி டாக்டர் ஒளவை நடராசன், டாக்டர். ச. வே. சுப்பிரமணியம், பாவலர். மா. முத்துசாமி, கவிஞர் ஈரோடு தமிழன்பன் ஆகியோர் பேசினர். நூலாசிரியர் செல்லப்பன் நன்றி நவின்றார்.

## சங்க இலக்கியக் கருத்தரங்கு

சென்னை மாநிலக் கல்லூரி தமிழ் உயர்வு ஆய்வு நிலையத்தின் சார்பில் அதன் இயக்குநர் டாக்டர். மெ. சுந்தரம் அவர்கள் 'சங்க இலக்கியக் கருத்தரங்கை' நடத்தினர். இப் பத்து நாள் கருத்தரங்கை திசம்பர் 24 அன்று தமிழக ஆளுநர் கே. கே. ஷா. செட்டி நாட்டிசர் ராசாசர். முத்தைய செட்டியார் அவர்கள் தலைமையில் தொடங்கி வைத்தார். இதில் சென்னை. அண்ணாமலை, மதுரை, கேரளா, வெட்கடேசுவரா பல்கலைக் கழக ஆசிரியர்கள் பங்கு கொண்டனர்.

## கவிஞர் எஸ். டி. சுந்தரம் அவர்களுக்குப் பண முடிப்பு

சென்னைப் பல்கலைக் கழகக் கலையரங்கில் திசம்பர் 21 அன்று கந்தன் ஆர்ட்ஸ் அகாடமியினர் கவிஞர். எஸ். டி. சுந்தரம் அவர்களைப் பாராட்டி ரூ. 55,000 கொண்ட பண முடிப்பைக் கொடுத்தனர். விழாவிற்குத் திரு., சிவாஜி கணேசன் தலைமை தாங்கினர்.

## சமஸ்கிருதத்திற்குத் தனிப் பள்ளிகள்

'சமஸ்கிருதத்தில் உள்ளது போல் வேறெந்த மொழியிலும் இலக்கியம் கிடையாது. அடுத்த படியாகத் தமிழைச் சொல்லலாம்' என்று வடமொழி மாநாட்டில் கலந்து கொண்ட காஞ்சி சங்கராசாரியார் கூறினர். சமஸ்கிருதத்தைக் கற்பிக்கத் தமிழ்நாட்டில் பல பள்ளிகள் திறக்கப்படுமென்றும் அவர் 'தமிழை நீசபாஷை' என்று முன்பு கூறிய சுவாமிகள் சமஸ்கிருதத்திற்கு அடுத்தபடி தமிழ்மொழி என்று சொன்னது வியப்பே.

## தமிழ் நாட்டுத் தொடர்வண்டி நிலையங்களில் இந்தியில் பெயர்ப் பலகைகள்!

தமிழ் நாட்டிலுள்ள எல்லாத் தொடர்வண்டி நிலையங்களிலும் (ரயில்வேக்கள் விரைவில் இந்தி பெயர்ப் பலகைகள் அமைக்கப்படும் என்று டாக்டர் சதுர்வேதி என்ற. தொடர்வண்டி உயர் அதிகாரி 14-10-75 இல் திருச்சூரில் செய்தியாளரிடம் கூறினர். தென் மாவட்டங்களில் தொடர்வண்டித் துறைகளில் இந்தி மொழியைப் பரப்புவதற்கென்று செயற்குழு வொன்று அமைத்துள்ளனர். டாக்டர் சதுர்வேதி இக்குழுவின் உறுப்பினர் ஆவார். தொடர்வண்டித் துறையில் பணியாற்றும் தொழிலாளர்களுக்கு இந்தி கற்றுத்தரும் திட்டம் மேலும் விரைவு படுத்தப்படுமென்றும் இந்தி மொழித் தேர்வுகள் எழுதித் தேறிய தொழிலாளர்களுக்கு ஊதிய உயர்வும் பரிசுத் தொகையும் வழங்கப்படுமென்றும் இக்குழு தெரிவித்துள்ளது.

## இந்தியைப் பரப்புதல் பற்றி அமைச்சர் சேத்தி அறிவுரை

"இந்தி பேசாத மக்கள், இந்தி தம்மீது சுமத்தப்படுகிறது என்று கருதாத வகையில் ஒழுங்கான, திட்டமிட்ட முறையில் இந்தியைப் பரப்புதல் வேண்டும். தக்க வசதிகள் செய்து கொடுக்கப்படுமானல் அதிகத் துன்பப்படாமல் ஒவ்வொருவரும் இந்தியைக் கற்றுக் கொள்வர்" என்று மத்திய பிரதேச முதலமைச்சர் திரு. பி. சி. சேத்தி அவர்கள், 19-10-75 இல் போபாலில் ஆச்சாரிய நரேந்திர தியோபாசா வித்தியா பீடத்தைத் துவக்கி வைத்துப் பேசுகையில் குறிப்பிட்டார்.

## இழுவை வண்டி இழுத்தவர் அமைச்சர் ஆனர்

உத்தரப் பிரதேசத்தில் ஒரு தாழ்த்தப்பட்ட குடியில் பிறந்த திரு. மௌரியா என்பவர் குழம்பாய இழிவுகளுக்கெல்லாம் ஆட்பட்டு, பல இடர்ப்பாடுகளுக்கிடையே கல்வி பயின்று, கல்லூரிப் படிப்பிற்குப் பணமில்லாமையால் கூலிவேலை செய்து பணம் சேர்த்து, கல்லூரி விடுதியில் தங்குவதற்கு. வாடகை 'ரிக்சா' இழுத்துச் சிறுகச் சிறுகப் பணம் சேர்த்து, கல்லூரி விடுதிக்குப் பணம் கட்டி, புத்தகங்கள் வாங்கிப் பயின்று எம். எசிப் பட்டம் பெற்ற ஒருவர் இப்போது இந்திய அரசின் அமைச்சர்களுள் ஒருவராகத் திகழ்கிருர்.

---

திருநெல்வேலி, தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்காக, சென்னை 2/140, பிரகாசம் சாலை, அப்பர் அச்சகத்தில் திரு. வ. சுப்பையா அவர்களால் அச்சிடப்பெற்றது.

ஆசிரியர்: வ. சுப்பையா.

# வெளியார் புதிய வெளியீடுகள்

| | | |
|---|---|---|
| உருவும் உணர்வும்—டாக்டர் சுப. அண்ணுமலே | 5 | 00 |
| சிக்கல் தீர்த்த செயல்வீரர்—அ. அறிவொளி | 4 | 50 |
| தலேவருள் மாணிக்கம்—நெ. து சுந்தரவடிவேலு | 5 | 00 |
| மலரினும் மெல்லிது—வித்தகன் | 6 | 50 |
| கண்ணதாசன் ஒரு கண்ணேட்டம்—ஆ. செகநாதன் | 4 | 50 |
| தமிழக நாட்டுப் பாடல்கள்—டாக்டர் பா. ரா. சுப்பிரமணியன் | 8 | 00 |
| பிறைதொழும் பெண்கள் (நாட்டுப்பாடல்) —டாக்டர் தமிழண்ணல் | 3 | 50 |
| அனிச்ச மலர்—நா. பார்த்தசாரதி | 5 | 50 |
| தமிழ் இலக்கியக் கொள்கை —உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம் | 10 | 00 |
| மோகம் முப்பது வருஷம்—மணியன் | 12 | 50 |
| குருநானக் தேவர் வரலாறு—அ. லெ. நடராசன் | 12 | 00 |
| சுவாமி விவேகானந்தர் வரலாறு—அ. லெ. நடராசன் | 20 | 00 |
| தமிழ்மாமணி பேராசிரியர் இராமநாதன் செட்டியார் —சோம. இளவரசு | 6 | 00 |
| அமுதக்கனி—மு. வலவன் | 7 | 00 |
| புன்னேப் பாட்டு—இ. சு. முத்துசாமி | 1 | 50 |
| பால்மதி—டாக்டர் ஏ. என். பெருமாள் | 6 | 00 |
| சிலம்பொலி—சிலம்பொலி செல்லப்பன் | 15 | 00 |
| எழுத்தாளர் ம. பொ. சி.—புலவர் சி. ஞானமணி | 6 | 00 |
| இராமகாதை—மு. ரா. கந்தசாமிக் கவிராயர் | 5 | 00 |
| ஐயப்ப சரிதம்—க. சே. வேங்கடேன் | 4 | 00 |
| எலுமிச்சம்பழம்—கொ. ரா. வேலாயுதம் | 1 | 25 |
| கருணேக்கு அழிவில்லே—எஸ். எஸ். தென்னரசு | 2 | 50 |
| திருமயிலே யமக அந்தாதி—டாக்டர் உ. வே. சாமிநாதையர் | 2 | 00 |
| சமுதாய மொழியியல்—டாக்டர் கி. கருணுகரன் | 10 | 00 |
| மருத்துவக்கலே அன்றும் இன்றும்—ரா. ராஜதுரை | 4 | 00 |
| நீ ஒரு பண்புத்தொகை—க. ப. அறவாணன் | 4 | 00 |
| கவிதை கிழக்கும் மேற்கும்—க. ப. அறவாணன் | 4 | 00 |
| தடைகளும் விடைகளும்—முரு. பழ. இரத்தினஞ் செட்டியார் | 6 | 25 |
| சித்தர்கள்—கே. ஆர். பசுபதி | 1 | 25 |
| தங்கத் தேனி—கா. ரா. நாச்சியப்பன் | 20 | 00 |

பதிவு எண் : M. 4899



அப்பர் அச்சகம், சென்னை-1.